


பெண்கள் தங்கள் மனோபாவங்களை அநேக அழகான வழிகளில் வெளிப்படுத்துகிறார்கள்.
விமல் அவற்றில் ஒன்று.

**புடவைகள்**
ஜார்ஜெட்ஸ்-ஷிஃபான்ஸ்-வாயில்ஸ்
டிஷ்ஷூஸ்-க்ரேப்ஸ்

தட்டிக் கேட்கிறோம்

# கண் துடைப்புக்கா, தேர்வுக் குழு?



படத் தேர்வுக்காக ஒரு குழு அமைக்கப்பட்டது. நீதிபதி பி. ஆர். கோகுல கிருஷ்ணன் இதன் தலைவர். பேராசிரியர் ந. சஞ்சீவி, சித்ரமகால் கிருஷ்ண மூர்த்தி, திருமதி. சௌந்தரா கைலாசம், திருமதி எம். என். ராஜம், புத்தனேரி சுப்ரமணியம். இவர்கள் தேர்வுக் குழுவினரில் இடம் பெற்ற சிலர்.

இந்தத் தேர்வுக் குழு தேர்ந்தெடுத்து அனுப்பிய படங்கள் ஐந்தில் ஒன்றுதான் அலைகள் ஓய்வதில்லை. மற்ற நான்கு படங்கள் தண்ணீர் தண்ணீர், கிழக்கே போகும் ரயில், ரயில் பயணங்களில், மூன்றாம் பிறை. இவற்றில் அலைகள் ஓய்வதில்லை படத்துக்கு மொத்தம் 7 பரிசுகள் கொடுத்திருக்கிறார்கள். 'மூன்றாம் பிறை'க்கு இரண்டு பரிசுகள் கொடுத்திருக்கிறார்கள்.

ஆனால்—

மத்திய அரசால் சிறந்த பிராந்தியப் படம் —சிறந்த திரைக்கதை இவற்றுக்கான பரிசு பெற்றதும், ரஷ்யாவில், 120 பிரதிகள் எடுக்கப்பட்டு வியாபார ரீதியாகவே, சப்—டைட்டில்களுடன் திரையிடப்படுவதும் — சமீபத்திய காமன்வெல்த் மாநாட்டிற்கு வந்த பிரதிநிதிகள் பார்ப்பதற்காகத் திரையிடப்பட்டவற்றுள் இடம் பெற்ற ஒரே தமிழ்ப்படமுமான தண்ணீர் தண்ணீருக்குப் பரிசு கிடையாது!

ஏன்?

இதுபற்றித் தேர்வுக்குழுவில் இடம் பெற்ற ஒருவருடன் பேசியபோது அவர் ''எங்களுக்குச் சுமார் 35 படங்கள் வந்தன. இவற்றில் ஐந்து படங்களை தேர்ந்தெடுக்கச் சொன்னார்கள். அவ்வளவுதான். இந்த ஐந்தில் சிறந்ததை யார் தேர்ந்தெடுத்ததென்று எங்களுக்குத் தெரியாது'' என்று சொல்லிவிட்டார்.

அமைக்கப்பட்ட குழுவுக்கு, சிறந்த படத்தைத் தேர்ந்தெடுக்கிற அதிகாரத்தை வழங்காமல், இன்னொரு மேலிடம் படத் தேர்வு செய்யுமானால், தேர்வுக் குழு என்று ஒன்று எதற்கு? கண்துடைப்புக்கா?

தண்ணீர் தண்ணீர் ஒரு பரிசு பெறக் கூடத் தகுதியில்லாததா என்பதே கேள்வி!

ஆரம்பம் முதலே தண்ணீர் தண்ணீரை ஆர்.எம்.வி., எம்.ஜி.ஆர். ஆகியோர் தாக்கிப் பேசியது, முதல்வருக்குத் திரையுலகினர் நடத்திய பாராட்டு விழாவை பாரதிராஜா முன்னின்று நடத்தியது — இந்த விஷயங்களை எல்லாம் பார்க்கும் போது விருதுகள் விஷயத்தில் அரசியல் பின்னணி இருக்குமோ என்ற சந்தேகம் வருவது இயற்கைதானே?

இந்த விஷயம் பற்றி கோமல் சுவாமிநாதனிடம் கேட்டபோது அவர் அமைதியாகச் சொன்னார்: ''சந்தேகமே கிடையாது, பாரதிராஜா சிறந்த டைரக்டர் தான். அவர் இன்னும் கொஞ்சம் முயன்றால் மாநில விருது இல்லை — தேசிய, சர்வதேச விருதுகள் பெறும் அளவுக்கு விஷயம் உள்ளவர். 'அ' ஓய்வதில்லை நல்ல படம் தான். அதற்குப் பரிசு கிடைத்தது பற்றி எனக்கு எந்தவித வருத்தமும் கிடையாது. இதில் அரசியல் பின்னணி ஏதும் இருக்காது என்று தான் நான் நினைக்கிறேன். அப்படி அரசியல் பின்னணி இருக்குமானால் அது நமது துரதிர்ஷ்டம். அது நல்ல கலைஞர்கள் உருவாகவும், கலை வளர்ச்சிக்கும் நிச்சயம் உதவாது.''

கடைசியாக—

ஒரு கிசுகிசு. சிறந்த நடிகை என்று தேர்வுக்குழு தேர்ந்தெடுத்தது சரிதா (தண்ணீர் தண்ணீர்) என்று கேள்விப்பட்டோமே?

ஒரு சந்தேகம்:

ஆண்டுதோறும் தமிழக அரசு படங்களுக்குப் பரிசு வழங்குவதுதானே வழக்கம். ஆனால் 81-ல் பரிசு தராமல் 81, 82 இரண்டாண்டுகளுக்கும் சேர்த்து இப்போது பரிசு வழங்கியிருப்பது என்ன காரணத்தால்?

—நமது நிருபர்







அமைதியான ஒரு முற்பகல். சில வருடங்களுக்கு முன்பு வரை 'ஜே' 'ஜே' என்றிருந்த கலைஞர் வீட்டு வராந்தாவில் கையில் ஒரு மனுவுடன் பார்வையிழந்தோர் இருவர், இரண்டு மூன்று கழகத் தொண்டர்கள் இவர்கள்தான். மாடிக்குப் பேட்டிக்காகச் செல்கிறோம். கல்கத்தாவில் நடந்த எதிர்க்கட்சித் தலைவர்கள் மாநாட்டைப் பற்றியும், அடுத்து சென்னையில் நடக்கப்போகும் மாநாட்டைப்பற்றியும் நமது கேள்விகளுக்குத் தடங்கலில்லாமல், சாரல் காலத்திய குற்றாலத்து அருவி போல மளமள வென்று பதில்கள் வருகின்றன. அடிக்கடி தொந்தரவு செய்த தொலைபேசி மணிகள் கூட, அவரது சிந்தனை ஓட்டத்தைத் தடை செய்ய முடியாமல் தவித்தன. தெள்ளத்தெளிவாக அழுத்தந் திருத்தமாகக் கலைஞர் சொன்ன பதில்கள்.....

**கேள்வி:** முதல் எதிர்க்கட்சித் தலைவர்களின் கூட்டத்துக்கும் சமீபத்தில் கல்கத்தாவில் நடந்துமுடிந்த கூட்டத்திற்கும் இடையில் சில மாற்றங்கள் இருக்கின்றன. குறிப்பாக பாரதீய ஜனதா, லோக்தளம் போன்றகட்சிகள் கல்கத்தாவில் கலந்து கொள்ளவில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலையில், "எதிர்கட்சித் தலைவர்களின் கூட்டம் மக்களின் ஒட்டுமொத்தமான நலன்களைப் பிரதிபலிக்கிறது" என்று ஜோதிபாசு அவர்கள் கூறியுள்ளார். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

**கலைஞர்:** எதிர்க்கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் எந்தெந்தக் கட்சிகள் கலந்து கொண்டன என்பது முக்கியமான பிரச்சினை அல்ல. கல்கத்தாவில் நடைபெற்ற எதிர்க்கட்சித் தலைவர்களின் கூட்டம் மக்களின் ஒட்டுமொத்தமான நலன்களைப் பிரதிபலிக்கிறது என்று ஜோதிபாசு அவர்கள் சொன்னதில் எந்தத் தவறும் இல்லை. மக்களின் பிரச்சினைகளை அடிப்படையாக வைத்துத் தான் கல்கத்தா மாநாட்டில் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன. அந்தத்தீர்மானங்களின் அடிப்படை மக்களின் நலன்கள் தான் என்பதில் கருத்து வேறுபாட்டுக்கு இடமே இல்லை.

**கேள்வி:** மக்களின் நலன்களை மற்றக் கட்சிகள் பிரதிபலிக்க வில்லையா? அவர்களும் பெரும்பான்மை மக்களின் பிரதிநிதிகளான கட்சிகள் தானே?

**கலைஞர்:** ஜோதிபாசு அவர்கள் தெரிவித்தது, நாங்கள் மக்களின் ஒட்டுமொத்தமான நலன்களைப் பிரதிபலிக்கிறோம் என்பதுதான். மற்றவர்களும் பிரதிபலிக்கலாம். எங்களைப் பொறுத்த வரையில் நாங்கள் பிரதிபலிக்கிறோம். அவ்வளவு தான்!

**கேள்வி:** இதுவரை நான்கு கூட்டங்கள் நடந்துள்ளன. கூடிக் கலைந்ததைத்தவிர வேறு ஏதாவது எதிர்க்கட்சிகள் சாதித்துள்ளதாக நினைக்கிறீர்களா?

**கலைஞர்:** ஜனநாயகத்தில் எதிர்க்கட்சிகள் இருந்தால்தான் ஒரு நாணயத்தில் இரண்டு பக்கமும் முழுமையாக இருப்பதாகப் பொருள். எதிர்க்கட்சிகள் மக்கள் பிரச்சினைகளுக்காகக் குரல் கொடுக்கும் பொழுது தான் ஆளுங்கட்சியின் கவனத்தைத் திருப்பமுடிகிறது. இதுவரை நடைபெற்ற எதிர்க்கட்சித் தலைவர்களின் மாநாடுகள் காரணமாகத் தான் மத்திய மாநில உறவுகளைப் பற்றி அகில இந்திய அளவில் இன்றைக்குப் பேசப்படுகிற சூழ்நிலை உருவாகியிருக்கிறது என்பதை மறந்து விடக் கூடாது.

**கேள்வி:** முதல் இரண்டு கூட்டங்களில் தி. மு. கழகம் பங்கு பெறவில்லை. என்ன காரணம்?

**கலைஞர்:** தென் மாநில முதலமைச்சர்கள் மாநாட்டுக்கு —ஹெக்டே அவர்களின் அழைப்பின் பேரில் புதுவை முதலமைச்சராக இருந்த டி. ராமச்சந்திரன் கலந்து கொண்டிருக்கிறார். அந்த மாநாட்டில் தமிழக முதலமைச்சர் எம். ஜி. ஆரும் கலந்து கொண்டார். அடுத்து நடைபெற்ற விஜயவாடா, டெல்லி எதிர்க்கட்சித் தலைவர்கள் மாநாட்டிற்கு எங்களுக்கு அழைப்பு வரவில்லை. நாங்கள் கலந்து கொள்ளவில்லை. அடுத்து நடைபெற்ற காஷ்மீர் மாநாட்டிற்கு எங்களுக்



# எதிர்க் கட்சிகளின் அணி சாதிக்கப் போவது என்ன?

## கலைஞர் சொல்கிறார்

கும் அழைப்பு வந்தது. எம். ஜி. ஆருக்கும் அழைப்பு வந்தது. நாங்கள் சென்று கலந்து கொண்டோம். எம். ஜி. ஆர். கலந்து கொள்ளவில்லை. பிறகு நடந்த கல்கத்தா மாநாட்டிற்கு எங்களுக்கு அழைப்பு வந்தது. நாங்கள் சென்று கலந்து கொண்டோம்.

**கேள்வி:** இந்திராகாந்தி அவர்களைப் பதவியிலிருந்து அகற்றுவதுதான் நோக்கம் என்ற ரீதியில் எதிர்க்கட்சிகளின் நடவடிக்கைகள் தோற்றமளிக்கிறதே?

**கலைஞர்:** தோற்றமளிப்பது அவரவர்களின் உள்ளத்தைப் பொறுத்தது. பொதுவாக இந்தியாவில் பொருளாதாரத்தில் ஒரு பெரிய மாற்றமும், மத்திய, மாநில உறவுகளில் ஒரு புதிய திருப்பமும் ஏற்பட வேண்டும் என்பது எதிர்க்கட்சிகளின் நோக்கம்.

**கேள்வி:** மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பான்மை காங்கிரஸ் ஆட்சி நடந்து கொண்டிருக்கும் போது, ஒரு அடிப்படையான மாற்றுத் திட்டமும் கொள்கைகளும் உருவாக்கிக் கொள்ளாமல் தனி மனிதர் ஒருவரை ஒழிக்கும் போக்கில் எதிர்க்கட்சிகள் செயல்படுவது சரிதானா?

**கலைஞர்:** நான் இதற்குமுன் புள்ள கேள்விகளுக்கு அளித்துள்ள பதிலில் கட்டிக் காட்டியிருக்கிறேன். கல்கத்தா மாநாட்டுத் தீர்மானங்களையும் கோரிக்கைகளையும் பத்திரிகைகளில் வெளியிட்டிருக்கிறோம். அதைப் படித்துப் பார்த்தபிறகும் தனி மனிதரை ஒழிக்கும் போராட்டம் என்று நீங்கள் பொருள் கொள்வது சரியல்ல.

**கேள்வி:** விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசு தான் காரணம் என்று பேசியிருக்கிறீர்கள். ஆனால் தி.மு.க. மாநில அரசை எதிர்த்துப் பல மறியல்கள், போராட்டங்கள் நடத்தியுள்ளதே?

**கலைஞர்:** விலைவாசி உயர்விற்கு மத்திய அரசு காரணம் என்று இன்றல்ல, என்றுமே நாங்கள் பேசி வருகிறோம். தி.மு.கழகம் ஆட்சியில் இருந்த போதும் அதை நாங்கள் திட்டவட்டமாகப் பேசியிருக்கிறோம். ஆனால் எம். ஜி. ஆர். அவர்கள் தேர்தல் நேரத்தில் விலைவாசிகளைக் குறைக்க மத்திய அரசால் முடியாவிட்டாலும் மாநில அரசு குறைத்தே தீரும் என்று வாக்குறுதி அளித்தார் என்பதை இப்போது கட்டிக் காட்டுகிறோம். நாங்கள் நடத்துகிற மறியல் போராட்டங்களில் மத்திய, மாநில அரசுகள் இரண்டையும் எதிர்த்துத் தான் கோரிக்கைகள் வைத்திருக்கிறோம். எங்கள் மறியல்கள் கூட, மத்திய, மாநில அரசுகளின் அலுவலகங்களின் முன்னால் நடைபெற்றன. விலைவாசி போன்ற பிரச்னைக்காக மத்திய அரசு அலுவலகங்களின் முன்பும், வேறு பல பிரச்னைகளுக்காக மாநில அரசு அலுவலகங்களின் முன்பும் நாங்கள் போராட்டங்கள் நடத்தியிருப்பதை எங்களுடைய ஏழு அம்சக் கோரிக்கைகளைப் படித்தாலே தெரியும்.

**கேள்வி:** கல்கத்தா மாநாட்டின் முடிவின்படி எதிர்க்கட்சிகள் மீண்டும்போராட்டங்கள் நடத்த முடிவு செய்துள்ளன. எப்போதும் போராட்டம், மறியல் என்றால் மக்களுக்கு எதிர்க்கட்சிகள் மேல் சலிப்பு ஏற்படாதா?

**கலைஞர்:** எப்போதும் போராட்டம், மறியல் என்று நாங்கள் போராட்டத்தைத் தேடி அலையவில்லை. அதே நேரத்தில் மக்களின் பிரச்னைகள் எழும்போது ஆளுங்கட்சியின் பார்வையைத் திருப்ப ஜனநாயகத்தில் மறியல்கள், போராட்டங்கள் இவைகள் எல்லாம் அவசியமானவைகளாக இருக்கின்றன.

**கேள்வி:** தேர்தலுக்கு முன்னும் பின்னும் எதிர்க்கட்சிகளின் உறவு நீடிக்க வேண்டுமென்று கூறியிருக்கிறீர்கள். அப்படியானால் தேர்தலின் போது எதிர்க்கட்சிகளின் கூட்டணி உருவாக வாய்ப்பு உள்ளதா?

**கலைஞர்:** இப்போது நாங்கள் பொதுவான பிரச்னைகளைப் பற்றித் தான் கலந்துரையாடுகிறோம். அந்த அடிப்படையில் தான் அணி திரண்டு நிற்கிறோம். தேர்தலைப் பற்றி எங்களுக்குள் எந்தப் பேச்சும்

ஜீவரத்னம் என்ற இளைஞன், சண்டை போட்டான் என்று மதுரையில் உள்ள தல்லாகுளம் போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்பில் அடைக்கப்பட்டான்.

அவன் வளர்த்து வந்த ஒரு நாய் அவனைத் தொடர்ந்து சென்றது. போலீஸ் ஸ்டேஷன் அருகிலேயே அவனை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தது.

நாயின் நன்றியுணர்வு கல்லைக் கனியச் செய்தது.



ஸ்டான்லி மைக்கேல் என்ற சப்-இன்ஸ்பெக்டர், சட்ட உதவிக் குழுவினரை அணுகி ஜீவரத்னத்தை ஜாமீனில் விடுவிக்க ஏற்பாடு செய்தார்.

நன்றி, 'சண்டே.'

தகவல்: சேலம் நிரிஞானி

---

இதுவரையில் நடைபெறவில்லை. எதிர்க்கட்சிகளின் கூட்டணி உருவாகும் வாய்ப்பு உண்டா இல்லையா என்பதுபோகப் போகத்தான் தெரியும்.

கேள்வி: அப்படியே இணைந்து வெற்றி பெற்றாலும் பல வேறு கொள்கைகளுடைய கட்சியில் உள்ளவர்கள் ஒன்றாகச் சேர்ந்து ஆட்சிநடத்த முடியும் என்று கருதுகிறீர்களா? ஏற்கெனவே ஒரு முறை மக்கள் ஏமாற்றமடைந்து விட்டார்களே?

கலைஞர்: திருந்திக் கொள்பவர்கள் தான் மனிதர்கள். தங்களுக்காக மட்டுமின்றி நாட்டிற்காகவும் திருத்திக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்படும்போது அதனை யாரும் புறக்கணித்து விட முடியாது.

கேள்வி: மாநில அரசுகளைக் கலைக்க வழி செய்யும் 356 வது அரசியல் சட்டப் பிரிவை ஒழிக்க வேண்டும் என்று பேசியுள்ளீர்கள். அரசியல் ஆதாயத்திற்காக 1980 இல் அ. தி. மு. க. அரசைக் கவிழ்க்க நீங்கள் உதவியாக இருந்தீர்களே, இதைப்பற்றிப் பேசுவதற்கு தார்மீக ரீதியாக உங்களுக்கு உரிமை இருக்கிறதா?

கலைஞர்: 1980–இல் மத்தியில் இந்திரா காங்கிரஸ் ஆட்சி அமைந்ததும், அ. தி. மு. க. அரசு மட்டுமல்லாமல் அது உள்ளிட்ட ஒன்பது மாநில அரசுகள் கலைக்கப்பட்டன. அதற்கு முன் உதாரணமாக 1977இல் மத்தியில் ஜனதா ஆட்சி அமைந்ததும் ஒன்பது மாநில காங்கிரஸ் ஆட்சிகள் கலைக்கப்பட்டன. அதே முன்மாதிரியைப் பின்பற்றி 1980ல் இந்திரா காங்கிரஸ் நடந்து கொண்டது. ஒரு மாநிலத்தை விட்டுவிட்டு மற்ற எட்டு மாநில அரசுகளை அவர்களால் கலைக்க முடியாது. என்ற காரணத்தால் ''முரண்பாடு'' வரும் என்பதற்காக அவர்கள் அப்படிச் செய்தார்கள். அதற்குத் தி. மு. கழகத்தின் தூண்டுதல் எதுவும் கிடையாது. நான் சென்ற முறை சட்டமன்றத்தில் பேசும்போது கூட 356–வது அரசியல் சட்டப் பிரிவு இருக்கும் வரையில் தி. மு. கழகமே மத்தியில் ஆட்சி அமைத்தாலும் மாநில அரசுகளைக்கலைக்கும் எண்ணம்தான் அதற்குத் தோன்றும். எனவே அத்தகையஎண்ணத்திற்கு வழிவகுக்கும் 356–வது பிரிவு அரசியல் சட்டத்திலிருந்து அகற்றப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தியிருக்கிறேன். அதைத்தான் இப்போது கல்கத்தா மாநாட்டில் பேசியிருக்கிறேன்.

கேள்வி: தற்போதுள்ள அரசியல் சூழ்நிலையில் நாட்டின் வடபகுதியில் செல்வாக்குள்ள சரண்சிங், வாஜ்பாய் போன்றோரை அடுத்த கூட்டத்திற்கு அழைப்பீர்களா? என்.டி.ஆர்.அவர்கள் எம்.ஜி.ஆரை எதிர்க்கட்சி தலைவர்கள் கூட்டத்துக்கு அழைக்கமுயல்கிறாரே, அதுபற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?

கலைஞர்: சென்னையில் நடைபெறவிருக்கும் மாநாட்டிற்கு நான் அமைப்பாளர்தான். எதிர்க்கட்சியில் உள்ள தலைவர்கள் அந்த மாநாட்டிற்கு யார் யாரை அழைக்க வேண்டுமென்று முடிவெடுக்கிறார்களோ அவர்களுக்கு அழைப்பு அனுப்பப்படும்.

கேள்வி: இழந்து கொண்டிருக்கும் தங்களின் செல்வாக்கைச் சரி கட்டத்தான் சென்னையில் எதிர்க்கட்சித் தலைவர்கள் கூட்டத்தை நீங்கள் ஏற்பாடு செய்துள்ளதாகச் சில எதிர்க்கட்சியினர் பேசியுள்ளார்களே நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

கலைஞர்: சரிந்து கொண்டிருக்கும் விற்பனையைச் சரிக் கட்டத்தான் 'கல்கி' என்னிடத்திலே இப்படி ஒரு பேட்டியை நடத்தி வெளியிடுகிறது என்று சொன்னால்நீங்கள் அதை எப்படி ஏற்றுக் கொள்ள மாட்டீர்களோ அதே போலத்தான் நானும் அவர்களது கூற்றை ஏற்றுக் கொள்ள இயலாதவனாக இருக்கிறேன்.

—நமது நிருபர்

படம்: ஜெயா

# கல்கி

அடுத்த வாரம்:

## ஆஸ்பத்திரியா ஐயோ வேண்டாம்!

நமது மருத்துவ மனைகளின் அவல நிலையைப் படம் பிடித்துக் காட்டும் ஆய்வுக் கட்டுரை

எதிர்பாருங்கள்!

## டி.வி.ஸ்பெஷல் (இலவச இணைப்பு)



டிவி தயாரிப்பு, விற்பனை, வாங்குதல், ஒளிபரப்பு, பார்வையாளரின் விருப்பு வெறுப்புக்கள் முதலிய பல அம்சங்களையும் விரிவாக A முதல் Z வரை தெரிவிக்கும் உபயோகமான சிறப்புமலர்

(இலவச இணைப்பு)

## ஆரோக்கியம் அழைக்கிறது

பல்வேறு நோய்களை வராமல் தடுப்பது எப்படி, தப்பித்தவறி உடம்புக்கு வந்துவிட்டால் என்னென்ன செய்யவேண்டும் என்று எளிமையாக ஆனல் விஞ்ஞான ரீதியாக விளக்கும் கையேடு. டாக்டர்களே எழுதி ஒரு டாக்டரே ஆசிரியராக இருந்து தயாரித்தளிக்கும் நிரந்தரப்பயன் தரும் ஆரோக்கிய அகராதி.



**கல்கி உங்களுக்காக மாபெரும் திட்டங்களை வைத்திருக்கிறது**

● 'சவீதா'வைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை. 'ஏனென்றால்' ஒரு வித்தியாசமான... மாறுதலான, விறுவிறுப்பான மர்ம நவீனம் எழுதியுள்ளாரே!
அயன்புரம்.
த. சத்தியநாராயணன்.



● குடியரசு நாளில் ஒவ்வொரு இந்தியக் குடிமகனும் தீவிரமாகச் சிந்திக்கத் தூண்டிய கவிதை' வரிகள் பொன்மணி வைரமுத்துவின் ''என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்''.
தஞ்சாவூர்—9 அ. சம்பத்.

● திடீரென்று தீவிரமான வயிற்று வலி நோய்க்கு ஆளானேன். 'இப்பொழுதும்' 'ம் ஒரு...' என்னும் நையாண்டிக் கட்டுரையைப் படித்து விழுந்து விழுந்து சிரித்ததினால் இந்நோய் வந்து விட்டது. டாக்டர் ஃபீஸ் நீங்கள் தர வேண்டும்!
சென்னை-35 பூபால்சிங்

● பிரதாப் இயக்கும்' 'மீண்டும் ஒரு காதல்கதை, மிகவும் வித்தியாசமான படம் தான். இதுவரை இம்மாதிரி படத்தை யாரும் நினைத்துக் கூடப் பார்த்ததாக எனக்கு நினைவில்லை!
சென்னை—5
எஸ்.வி.ராஜசேகர்

● சென்னையில் வரவர முன் அறிவிப்பின்றிக் கிளை நூலகங்களை இழுத்துமூடுகிறார்கள். பெண் வாசகர்களுக்குஎன்று ஒரு தனி ஒதுக்கிடம் எந்த ஒரு கிளை நூலகத்திலும் இல்லாதது பெரிய குறை! வீட்டு வேலைகள் முடித்துப் போகும் நேரத்தில் பூட்டுத்தான் தொங்குகிறது!
சென்னை—39
எழுதுகோல் வளையாள்.

ஆக்டோபஸ்ஸி திரைப் படக் கதையின் தமிழாக்கம் மிகவும் நன்றாக இருந்தது. திரைப்படத்தை நேரில் பார்த்திருந்தால் கூட இவ்வளவு விறுவிறுப்பு இருந்திருக்குமா, சந்தேகமே.
தேனி, ச. புவனேந்திரன்

● சமீபத்தில் எங்கள் ஊரில் ஒரு சாராயக்கடை திறக்கப்பட்டுள்ளது. மது பானக் கடையின் வலது புறம் ஸ்ரீ ஆஞ்சநேயர் ஆலயமும், இடப்புறம் கிளை நூல் நிலையமும் உள்ளன. மூக்கைப் பிடித்துக் கொண்டு சுவாசிப்பதை நிறுத்தி விட்டுத்தான் ஆலயத்தினுள்ளேயும் நூல் நிலையத்தினுள்ளேயும் செல்ல முடியும். அதிகாரிகள் கவனிப்பார்களா?
லால்குடி—1
ஆ. சந்திரசேகரன்.

● 'அன்புச் சிறுவைகள்' என்ற சிறுகதை மூலமும் நெகிழ வைக்க முடியும் தன் எழுத்தால் என்று நிரூபித்திருக்கிறார் திரு. முத்து. தங்கஜயப்பன்.
ஸ்ரீவில்லிபுத்தூர்
எஸ். சதாசிவம்.



● சிதைந்துபோன ரூபாய் நோட்டுக்களை அரசுடைமையான வங்கிகள் ஏற்று மாற்று நோட்டு தரவேண்டும் என்று ரிசர்வ் பாங்க் சுற்றறிக்கை இருக்கிறது. ஆனால் அரசுடைமையான வங்கிகள் இதன்பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்வதில்லை. தொந்தரவு எனக் கருதுகிறார்கள்.
கல்கத்தா-19 எஸ்.வெங்கடசுப்பிரமணியன்



● கிழிந்த பழைய ரூபாய் நோட்டுக்கள் சுலபமாக மாற்றப்பட வேண்டுமென்று ஏ. ஜி. சுபாஷ் எழுதிய கடிதம் படித்தேன். என்னுடைய கிழிந்த 10 ரூபாய் நோட்டு ஒன்றை மாற்றுவதற்காக ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியா, ஹைகோர்ட் கிளைக்குச் சென்றேன். சீப் கேஷியர் மற்றும் பேங்க் மானேஜர் இருவரும் ரூபாய் நோட்டை மாற்றித் தருவதற்கு மறுத்து விட்டனர். ரிசர்வ் வங்கிக்கு எடுத்துச் செல்லுமாறு என்னிடம் கூறினர். அவ்வாறு அவர்கள் கூறியதை எழுத்து மூலம் பெற்றுக் கொண்டு பிரபலமான வக்கீல் ஒருவரை அணுகி முறைப்படி நோட்டீஸ் கொடுத்து பின்னர் ஹைகோர்ட் முன்சீப் கோர்ட்டில் கேஸ் போட்டிருக்கிறேன். வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. இது சம்பந்தமாக நான் இதுவரையில் ரூபாய் 200 செலவழித்திருக்கிறேன்.
சென்னை—54, என். மணி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# டாக்டர் ஃபீஸ் நீங்கள்தான் தர வேண்டும்!

### ஆனி:

▫ அனாதை இல்லத்திலிருந்து ஒரு பெண் குழந்தையை அழைத்து வந்து ஒரு வாரத்துக்குத் தன்னுடன் வைத்துக் கொண்டு சீராட்டுகிறார் கோடீசுவரர் வார்பக். குழந்தை ஆனியின் கலகலப்பும் பாசமும் அவரைக் கவர்ந்து விட அவளை அவள் பெற்றோர்களிடம் ஒப்படைக்கும் முயற்சியில் இறங்குகிறார். பொய்யாக உரிமை கொண்டாடி வரும் தம்பதியுடன் ஆனி அனுப்பப்படுகிறாள். தவறு தெரிந்ததும் ஆனியைத் தேடிக் கண்டு பிடிக்க எல்லா முயற்சிகளும் செய்யப்படுகின்றன. திகில் நிறைந்த சில காட்சிகளுக்கும், ஹெலிகாப்டர் சண்டைக்கும் பிறகு மீட்கப் படுகிறாள். வார்பெக்கே அவளுக்குத் தந்தையும் தாயும் ஆகிறார்.



# பயாஸ்கோப்



### பிளேட் ரன்னர்

▫ மனிதன் தன் ஜெனடிக் இஞ்ஜினியரிங் அறிவால் உருவாக்கிய செயற்கை மனிதர்களே அவனுக்கு எதிராகத் திரும்பி விட்டால் நடக்கக் கூடிய பயங்கரங்களைக் காணலாம் 'பிளேட் ரன்னரில்' செயற்கை மனிதர்கள் தங்கள் படைப்பாளிகளைக் கொலை செய்கிறார்கள், காதலிக்கிறார்கள்; பழிக்குப் பழி வாங்குகிறார்கள், காப்பாற்றுகிறார்கள்!

''புதிய திருப்பங்களை உடைய பழைய கதை'' என்று இதை வர்ணிக்கிறார் ஹாரிஸன் ஃபோர்ட். வழக்கமான 'டிஷூம் டிஷூம்' படம்தான். ஆனால் இதில் வில்லன்கள் செயற்கை மனிதர்கள். கதை நிகழும் காலம் கி. பி. 2020 ஆண்டு! கற்பனை கட்டவிழ்ந்து பறக்கக் கேட்பானேன்.

த. மு. ரா.


ரொம்ப வேகம்..
மெதுவா
ஓடுங்க!
வன்முறைச்
சக்திகள்
சீக்கிய
மதக் கோட்பாடுகள்
கிரந்த் சாகிப்
லாங்கோவால்
பிந்த்ரான்


பானைக்கு அரிசி கேட்டா
யானையைக் கொடுக்கறீங்களே!
84-85
திட்டச் செலவு
20,000
கோடி
மத்திய
அரசு


கோவிந்த பவன்
காபி - சாப்பாடு
ரசம்
பிரமாதம்!
எல்லாம் சரிதான்!
மல்லியைக் குறைச்சுப்
போடுங்க!

கல்கி

1984 பிப்ரவரி 12
ருத்ரோத்காரி தை 29
மலர் : 42 இதழ் : 28





# ஆட்டோ அரசியல்!

எட்டுநாள் வேலைநிறுத்தத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு சாலைக்குத் திரும்பியுள்ள ஆட்டோ ஓட்டுனரை ''வருக! வருக!'' என்று வரவேற்கிறோம்! எட்டு தினங்களாக உங்களையும் உங்கள் மங்கலநிற வாகனங்களையும் காணாமல் எமது கண்கள் பூத்துப் போயின! எழும்பூரிலோ, ஸெண்ட்ரலிலோ இறங்கும் எங்களை, ''வாங்க ஸார், ஆட்டோவா? எங்கே போகணும்?'' என்று மர்மப் புன்னகையுடன் வரவேற்க உங்களை விட்டால் யாருண்டு? ஆட்டோவில் நாங்கள் ஏறிய பிறகு நீங்கள் நடந்து கொள்ளும் விதமே வேறாக இருக்கலாம். அதற்கென்ன செய்ய? தேர்தல் சமயத்தில் குழைகிற மாதிரியா தேர்தலில் வெற்றி பெற்ற பிறகு அரசியல்வாதிகள் எங்களிடம் நடந்து கொள்கிறார்கள்?

கட்டண உயர்வுக்கு அரசு சம்மதித்திருப்பதாக அமைச்சர் கூறியுள்ளார். 'எல்லாமே விலை ஏறும்போது ஆட்டோ கட்டணம் மட்டும் உயராமல் இருக்குமா?' என்று நாங்கள் மனத்தைத் தேற்றிக் கொள்கிறோம். ஆனால் இதற்குப் பிரதியாக நற்பண்புகள் சிலவற்றை உங்களிடம் நாங்கள் எதிர்பார்க்க ஆரம்பித்தால் அது எங்கள் பிசகே தவிர உங்கள் குற்றம் இல்லை. தங்களுக்குத் தாங்களே ஊதியங்களை உயர்த்திக் கொள்ளும் எம். எல். ஏக்களும் எம். பிக்களும் அது காரணமாக சட்டமன்ற, நாடாளுமன்றங்களிலும் அவற்றுக்கு வெளியேயும் பண்பாட்டுடனா நடந்து கொள்கிறார்கள்?

ஆட்டோவில் மூன்று பேர் பயணிக்க அனுமதிக்க வேண்டும் என்று போராடி வெற்றி பெற்றுள்ளீர்கள். ஆட்டோவில் நான் ஏறிய பின் என் வழி செல்கிற (அல்லது செல்லாத) இன்னொருவரையும் நீர் ஏற்றிக் கொள்ளாதிருக்க வேண்டும் என்பதற்காகவே நான் இதுவரை என் மனைவியுடன் சேர்ந்து பயணம் செய்து வந்தேன். இனி மாமியாரையும் அழைத்துப் போக வேண்டியதுதான்! என் குடும்ப ஒற்றுமைக்குப் பேருதவி புரிந்துள்ள உமக்குக் கோடி கும்பிடு!

சாலைச் சட்டங்களையும் வாகன விதிகளையும் நீங்கள் கண்டிப்பாக அனுசரிக்க வேண்டும் என்று அமைச்சர் எச்சரித்திருக்கிறார். கிடக்கிறார், விட்டுத் தள்ளுங்கள். அரசியல்வாதிகள் திடீர் திடீரென்று கட்சிமாறும் போது நீர் அடிக்கடி லேன் மாறினால் என்ன தப்பு? அயல்நாடுகளில் அரசு வாங்கும் எல்லாப் பொருள்களுக்கும் ஆளும்கட்சிக்குக் 'கட்' இருக்கும்போது நீங்கள் மீட்டருக்குமேல் இரண்டோ நாலோ கேட்டால் என்ன பிசகு? அரசுத்துறை நிறுவனங்கள் பலவும் கணக்கு எழுதுவதிலே கோல்மால் பண்ணும்போது நீங்கள் மீட்டரை அட்ஜஸ்ட் பண்ணி வைத்தால் என்ன குடிமுழுகிப் போய்விடும்? பணம் கொடுத்து வோட்டு வாங்கும் அரசியல்வாதி இருக்கும் வரை காவலரை நீரும் கவர் பண்ணலாம் கவலைப்படாதீர்!

நடமாடும் நீதிமன்றங்கள் உங்களை விசாரிக்கக் கூடாதென்ற 'உங்களுடைய தர்ம நியாயமான கோரிக்கையை அமைச்சர் ஏற்காதது பெரும் தவறு! எந்த நீதிமன்றமுமே தங்களை விசாரிக்க முடியாதென்று நமது ஆட்சியின் உச்சியில் உள்ள சிலர், தங்களுக்குத் தாங்களே சலுகை வழங்கிக் கொண்டு சட்டமியற்றி, நிறைவேற்றிக் கொண்டுமிருக்கும்போது உங்கள் கோரிக்கையில் மட்டும் என்ன குற்றம் கண்டுவிட்டார் அமைச்சர்?

நகர எல்லை உங்களுக்குப் போதாதுதான். பெருநகர் எல்லைவரை உங்கள் ஆதிக்கம் பரவவேண்டும்தான். எம். பிக்களும், எம். எல். ஏக்களும் உலகைச் சுற்றிவந்து ஃபாரின் பொருள்களையும் அள்ளிச் சுருட்டிக்கொண்டு திரும்புகையில் நீவிர் பெருநகர் எல்லை வரை சென்று எம்ப்டி ரிடர்னைச் சாக்கிட்டு டபுள் ஃபேர் வாங்கி வருவதில் என்ன தவறு?

உங்களில் சில உயர் பண்பாளர்கள் இருக்கலாம். காலத்தை அனுசரித்து நடக்கத் தெரியாத கையாலாகாதவர்கள்! ஒழிகிறார்கள், விட்டுத் தள்ளுங்கள். நீங்கள் பாட்டுக்கு ஜாம், ஜாமென்று நடத்துங்கள் உங்கள் ஆட்டோ அரசியலை!



## அத்தியாயம் 15

## ராஜோபசாரம்

சோழனையும் சேரனையும் அருகருகே பார்த்தவர்கள், அந்தி சந்தி சூரியன்களை ஒரு சேரஒரேநேரத்தில் பார்த்தது போல் பிரமித்தார்கள். இருவரும் போட்டி போட்டுக் கொண்டு அணிந்திருந்த பட்டாடைகளும் முத்தாரங்களும் நவரத்தினங்கள் பதிக்கப் பெற்றிருந்த ஆபரணங்களும் குண்டலங்களும் வாகு வளையங்களும் மணிமுடிகளும் அங்ஙனம் பிரகாசித்தன. தேவேந்திர சபை இதைவிடவா சிறப்பாக இருக்கப் போகிறது என்று எண்ணுமாறு இன்றைய தினத்துக்கென்றே அரண்மனை கொலு மண்டபம் புது மெருகு பெற்றுத் திவ்விய அலங்காரங்களையும் பூண்டிருந்தது. அம்மாபெரும் கூடத்தின் ஒரு பக்கத்தில் இருந்த பெரிய மேடையில் ரத்ன கம்பளம் விரிக்கப் பெற்று அதன் மேல் சரியாசனங்களாக இரு இரத்தினகசித சிம்மாசனங்கள். அவற்றில் கம்பீரமாக வீற்றிருந்த மன்னர்களைப் பார்க்க ராம லக்ஷ்மணர்களைப் போலிருப்பதாகத் தமக்குள் கூறி அவையினர் மகிழ்ந்தனர். மன்னர்களுக்குப் பின்னால் பட்டினாலான புலிக் கொடியும், விற்கொடியும் தொங்கின. இடைஇடையே முத்தாரங்கள் தோரணங்களாகியிருந்தன. ஆதித்தனுக்கும் தாணுரவிக்கும் இருபுறமும் சற்றே தாழ்ந்த நிலையில் வேறு இரு சிங்காதனங்கள். அவற்றில் சோழனுக்கருகே இளங்கோப்பிச்சியும் சேரனையொட்டினாற் போல் இளவரசன் கன்னரதேவனும் அமர்ந்திருந்தனர். இருபுறமும் நீண்டிருந்த மந்திரி பிரதானிகள் கூட்டத்தில் அனைவருக்கும் முன்னதாகக் கடம்பமாதேவியும் குவாந்தகனும் காணப்பட்டனர்.

''உங்களுக்குரிய இடத்தை நான் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டேன் போலிருக்கிறதே'' என்று தாணுரவி இளங்கோப்பிச்சியைப் பார்த்து உபசாரமாகக் *கேட்கவும் அவையில் முன் வரிசையில் இருந்த சிலர் காதில் அது விழ மரியாதையுடன் கூடிய மென்மையான சிரிப்பொலி எழுந்தது.

''உங்களுக்கென்றால் மட்டும் அந்த உரிமையை மகிழ்ச்சியோடு நான் விட்டுக் கொடுக்கிறேன்'' என்றாள் மகாராணி.

• ''சோழப் பேரரசியின் அழகைப் போலவே பெருந்தன்மையும் உயர்வாகத் தானிருக்கிறது. என் நண்பன் ரொம்பப் பாக்கியசாலிதான்!''

''உங்கள் நண்பரை விடவும் பாக்கியசாலிகளான இருவர் இங்கே இருக்கிறோமே'' என்றான் கன்னரதேவன். ''அவரை கணவராகவும் தந்தையாகவும் பெற்ற என் தாயும் நானும்!''

தாணுரவி அரியாசனத்தின் முனைக்கு முன்னேறி உடலையும் கரத்தையும் நீட்டி கன்னரதேவனின் கன்னத்தைத் தட்டிக்கொடுத்தான்.

'ஆமாமாம்! இவருக்குச் சினம் பொங்காத போதெல்லாம் நான் பாக்கியசாலிதான்' என்று எண்ணிக் கொண்ட இளங்கோப்பிச்சி புன்முறுவல் செய்தாள். ஆதித்தன் கோபித்துக்கொண்டு பிச்சியின் பாதச் சிலம்புகளுடன் அவளையும் உதறி விட்டுப் போன அந்த இரவு அவளுக்கு நினைவு வந்தது. தன்னை விட்டு, அந்தப்புரத்தைவிட்டு, அரண்மனையை விட்டு, தஞ்சைத் தலைநகரையே விட்டுக் குதிரை ஏறிப் பறந்து சென்று விட்டாரே, ஒரு வார்த்தை கூடச் சொல்லிக் கொள்ளாமல்! கோபம் என்றால் ஆத்திரம் தீர இடிமுழக்கக் குரலில் திட்டி விட்டாலும் பரவாயில்லை, இவரோ அலட்சியப்படுத்தியும் ஒதுக்கியும் மௌனம் சாதித்துமே ஆளைக் கொன்று விடுகிறார், பல சமயங்களில். அன்றிரவு முழுவதும் இளங்கோப்பிச்சி மையும் மனமும் கரைய விசும்பி அழுதாள். மறுநாள் காலை குவளை வந்து, இவள் நிலை கண்டு இரங்கி, ''அடேடே! இரவோடு இரவாக ஆதித்தன் புறப்பட்டுப் போயிருக்கிறானே என்பதற்காகவா அழுகிறாய்? முக்கிய அலுவலாகத்தான் சென்றிருக்கிறான். 'பல கடகங்களையும் மேற்பார்வையிட்டுத் திரும்பச் சில காலமாகும்' என்று நேற்றே என்னிடம் சொன்னான். ஏதேனும் அவசரப் பணி என்றால் அமைச்சர்கள் என்னிடம்தான் யோசனை கேட்டார்கள் என்றும் முடிவு சொல்கின்ற அந்த நேரத்தில் நீயும் கன்னரதேவனும் என் அருகிலேயே இருக்க வேண்டும் என்றும் கூறிப் போயிருக்கிறான்'' என்றாள். குவளை இவ்வாறு பேசவும் ஓரளவு சமாதானம் அடைந்த இளங்கோப்பிச்சி சுரங்கப் பாதையில் ஆதித்தனைப் பின் தொடர்ந்தது பற்றியோ அது அவனுக்குத் தெரிய வந்து விட்டது குறித்தோ குவளையிடம் வாய் திறக்கவில்லை. அன்று தலைநகரிலிருந்து கிளம்பிப் போனவன்தான். நேற்று இரவு தான் திரும்பி இருந்தான். நாடெங்கும் சுற்றி அலைந்ததில் ஒரே களைப்பு, அசதி. நீராடி முடித்ததும் உணவருந்தவும் மறுத்து ஆயாசத்துடன் மஞ்சத்தில் மல்லாந்து

* * *

மேலட்டையில்: மஞ்சுளா நரசிம்மன்
வண்ணப்படம்: எம். கே. ராமமூர்த்தி



நித்திரையில் ஆழ்ந்தான். இன்றோ அதி காலையிலிருந்தே தஞ்சை மகிழ்ச்சிக்கடலில் மிதந்து கொண்டிருக்கிறது. தலைநகர் இன்று வரை கண்டிராத அளவில் ஒரு மாபெரும் கோலாகல வரவேற்பு. கோட்டைக்கு வெளியே எதிர்கொண்டழைத்து ஆர்வமும் ஆரவாரமும் குமிழியிட ஊர்வலம் முடித்து இதோ அரசவையில் இராஜோபசாரம்! இளங்கோப்பிச்சியின் கரங்கள் கணவனைக் கட்டி அணைக்கவும் இதயம் மன்னிப்பு வேண்டவும் துடித்துக் கொண்டிருந்தன. ஆனால் அதற்கு இன்னும் எத்தனை சாமங்கள் காத்திருக்க வேண்டுமோ?

ஒரு பெருமூச்சிலே அவள் நெஞ்சு விம்மித் தணிந்த அதே நேரத்தில், ''கன்னர தேவா! கடவுள் வணக்கமாக நம்பியிடம் நீ பயின்ற ஏதேனும் ஒரு பதிகத்தைப் பாடலாமே'' என்றான் ஆதித்தன்.

---

## அமைச்சரிடமிருந்து ஃபோன்!

சென்ற இதழில் வெளியான மின்துறை அமைச்சர் பேட்டியை கல்கி இதழ் வெளியான வியாழன் அன்றே அமைச்சர் கருத்தூன்றிப் படித்துவிட்டு நமது நிருபர் செய்துள்ள இரு சிறுபிழைகளைச் சுட்டிக்காட்டி உடனே டெலிபோன் செய்தார். பெரிய விவசாயிகளிடம் யூனிட்டுக்கு 18 பைசா வசூலிக்கப்படுகிறது என்பது தவறு. 15 பைசாதான் வசூலிக்கப்படுகிறது. சிறிய விவசாயிகளிடம் 12 பைசா. மாநிலத்திலுள்ள நீர்மின் நிலையங்கள் வடமேற்குப் பருவ மழையை நம்பி உள்ளன என்பது பிழை. தென்மேற்குப் பருவ மழை என்று இருக்க வேண்டும். நேயர்களைப் பிழை பொறுத்துத் திருத்திக் கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

—ஆசிரியர்.



இளவரசன் உடனே எழுந்து நின்று, கைகூப்பி, கண்மூடிப் பாட ஆரம்பித்தான். கணீரென்ற குரலில் திருநாவுக்கரசரின் தேவாரம் ஒலித்தது:

''என்னை ஏதும்
அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும் முன்
ஏதும் அறிந்திலேன்
என்னைத்தன் அடி
யான் என்(று) அறிதலும்
தன்னை நானும்பி
ரானென் றறிந்தேனே!''

''அடடா! எளிய அற்புதமான பாடல்! எவ்வளவு இனிய குரல்! எத்தனை உருக்கம்!'' என்று வியந்து போற்றினான் தாணுரவி. ''ஆதித்தா! இந்த இளம் வயதில் இத்தனை பக்தி ரசம் சொட்டச் சொட்டப் பாடுகிறானே உன் புதல்வன்!'' பேசியவாறே ஒரு முத்தாரத்தைக் கழுத்திலிருந்து கழற்றி இளைஞனுக்கு அணிவித்துத் தோளில் தட்டிக் கொடுத்து மகிழ்ந்தான்.

இதன் பிறகு ஆமாத்தியரும் படைத்தலைவர்களும் புலவர்களும் அறிமுகமானார்கள். சிற்றரசர்கள் பலர் காணிக்கை செலுத்தி வணங்கினர்.

''கலைநிகழ்ச்சி தொடங்கலாமா?'' என்று கேட்டு தாணுரவியின் தலையசைப்பு கிடைத்ததும் கைதட்டினான் ஆதித்தன். அவையில் அமைதி நிலவவும், ''இங்கே நமது ராஜ நர்த்தகி வந்திருக்கிறாளல்லவா?'' என்று மன்னர் கேட்டு முடிவதற்குள் அதுவரை திரை மறைவிலிருந்த வாத்தியங்கள் முழங்க, துரிதமான அந்தத் தாளகதிக்கு ஏற்ப 'கலீர் கலீ'ரென்று சதங்கை ஒலிக்க மின்னலெனத் தோன்றி, வந்த வேகத்திலேயே நர்த்தனம் செய்தாள் அபிமானவல்லி.

அவைக்குள் பிரவேசித்த விதத்திலேயே அனைவரையும் திடுக்கிட்டு நிமிரச் செய்தவள், அடுத்து தன் வனப்பாலும் அந்த வனப்பை எடுத்துக் காட்டவே செய்து கொண்டிருந்த அலங்காரத்தாலும் பிரமிப்பில் ஆழ்த்தினாள். மோகனாஸ்திரம் பிரயோகிக்கப்பட்டது போல அவையில் அத்தனை பேரும் சொக்கிப் போனார்கள். ஒரு வினாடி கண் இமைத்தாலும் இழப்பு நமக்குத்தான் என்று உணர்ந்தவர்களாக அவளுடைய ஒவ்வொரு அசைவையும் அந்த ஒவ்வொரு அசைவிலிருந்தும் தெறித்துச் சிதறிய அழகுகளையும் அள்ளிப் பருகினார்கள்.

எத்தனையோ விதமான அலங்காரங்களில் எத்தனையோ தடவைகள் அவளைப் பார்த்திருந்த போதிலும் இன்று ஆதித்தனே இந்த எழில் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திணறித்தான் போனான். தாணுரவியோ வியப்பில் விரிந்த விழிகள் நிலைகுத்தி இருக்க மூச்சு விடவும் மறந்தவனானான்! குலாந்தகனின் கண்கள் பளபளப்பதையும் அவன் நெஞ்சு பெருமூச்சுக்களால் துருத்தியாய்ப் புடைப்பதையும் அவன் கரங்கள் அமர்ந்திருந்த ஆசனத்தின் கைப்பிடியை அழுந்தப் பற்றி வெளிறிப் போவதையும் கடைக்கண்ணால் கவனித்தாள்

# என்பீல்ட்

# மண்ணெண்ணை

# பம்பு செட்டுகள்

- உறுதியானவை. நம்பிக்கையானவை. நெடுநாள் உழைப்பவை.
- சிறு விவசாயிகளுக்கு மிக ஏற்றவை: 3 ஏக்கர் வரை– 2 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு 5 ஏக்கர் வரை-3:4 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு
- மிக இலேசானவை—நிலம் விட்டு நிலம் எடுத்துச்செல்ல எளிதானவை
- அரசுக் கடன்களுக்கும் மானியங்களுக்கும் அங்கீகாரம் பெற்றவை.

4 லட்சம் விவசாயிகளுக்கு மேல் பயன் படுத்துகிறார்கள்



IS:7347




Villiers

# என்பீல்ட்

புல்லெட் மோட்டார் சைக்கிள் அளிப்பவர்கள்

ADWAVE-EIA 2404

கடம்பமாதேவி. இளங்கோப்பிச்சியின் கண்களோ தன் கணவனின் திருமுகத்தையும் சேரமானின் வதனத்தையும் மாறி மாறிப் பார்த்து அவர்களுடைய எண்ணங்களின் பிரதிபலிப்பை அங்கே படிக்க முயன்றன.

நர்த்தனம் முடிந்து சற்று நேரமாகியும் அவையினர் பிரமை பிடித்தாற்போல அசையாதிருந்தனர். ஆதித்தன்தான் மயக்கத்திலிருந்து முதலில் விடுபட்டவனாக மற்றவர்களையும் சுயநினைவுக்குக் கொண்டு வர விரும்பிக் கைதட்டினான். தாணுரவி திடுக்கிட்டு நிமிர்ந்து அவனுடன் சேர்ந்துகொண்டான். அவ்வளவுதான், அவையிலிருந்த அத்தனை பேரும் அந்தக் கரவொலியில் பலமாகச் சேர்ந்து கொண்டதில் மண்டபமே அதிர்ந்தது.

சேரமான் தன் நெஞ்சிலே தவழ்ந்த மணி ஆரங்கள் பலவற்றை ஒரு கொத்தாகப் பற்றி எடுத்துக் கழற்றிச் சன்மானமாக வழங்கவும் சற்றே தயங்கி ஆதித்தனை ஏறிட்டாள் அபிமானவல்லி.

''பெற்றுக் கொள் வல்லி! மறுப்பது பண்பல்ல'' என்றார் மன்னர்.

பெருமூச்சுக்கள் இன்னும் அடங்காத நெஞ்சத்துடன் சேரமானை நெருங்கினாள் வல்லி. ஆபரணங்களைத் தன் கரங்களில் வழிய விட்ட தாணுரவியின் விழிகளைக் கவனித்தாள். அவை அவள் கண்களைச் சந்திக்காமல் எழில்களை எடைபோட்டுக்கொண்டிருப்பதைக் காணவும் இலேசான ஏளனப் புன்னகை தவழப் பின்வாங்கிச் சென்றாள்.

''நண்பரே சில கணங்கள் ஓய்வுக்குப் பின் அடுத்த நடனத்துக்குச் சித்தமாகிவிடுவாள் அபிமானவல்லி'' என்றான் ஆதித்தன்.

''போதும், போதும்'' என்றான் தாணு ரவி. ''இதற்கு மேல் இவள் ஆடினால் பூவுலகம் தாங்காது. தேவருலகில் ரம்பை ஊர்வசி, மேனகை என்றெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்கள் அனைவரது அழகுகளையும் ஆற்றல்களையும் ஒருருவாக்கிக் கண் எதிரே நிறுத்தி விட்டீர்!''

அவை கலையலாம் என்று உத்தரவளித்தான் சோழன். ''பிச்சி! நண்பகல் விருந்துக்கான ஏற்பாடுகளைக் கவனிக்கிறாயா?''

சேரமானுடன் அந்தரங்கமாக அளவளாவ விரும்புகிறான் ஆதித்தன் என்பதைப் புரிந்து கொண்ட பிச்சி, மகன் கன்னரதேவனுடன் தாணு ரவியிடம் விடைபெற்றுப் பிரிந்து சென்றாள்.

கொலு மண்டபத்திலிருந்து ஆலோசனை மண்டபம் நோக்கி நடந்தவாறே, ''இன்று இறை வணக்கம் பாட திருநாரையூர் நம்பி இல்லாதது பெருங்குறை'' என்றான் தஞ்சையர்கோன். ''நாட்டெல்லையில் தங்களை வரவேற்ற பின் மீண்டும் தனியே தலயாத்திரை கிளம்பிச் சென்று விட்டாராமே!''

''ஆமாமாம்'' என்ற சேரமான், ''அவர் கேட்ட ஒரு கேள்விக்குப் பதிலாக நான் சிரித்த ஒரு சிரிப்பைக் கண்டே பயந்து ஓட்டம் பிடித்திருப்பார்'' என்று அந்த நினைவில் மீண்டும் நகைத்தவன், சட்டென்று தான் ஏதோ தவறு செய்து விட்டதுபோல் உணர்ந்து அடி உதட்டை உள்ளுக்கிழுத்துக் கொண்டான்.

குலாந்தகனும் திடுக்கிட்டுப் போனான். வரும் வழியெல்லாம் நம்பிக்கு கூட அடையாளம் தெரியாதபடி மாறுவேடம் அமைந்தது குறித்துத் திருப்தியுடன் பேசிக்கொண்டும் அதற்குக் காரணமான கடம்பமாதேவி

## நகர்வலம்

# KODUMAIYILUM

1. கோவில்களில் நிறைய பேர் டியூப் லைட்டுகள் நன்கொடை தருகிறார்கள். ஆனால் அவற்றிலிருந்து அதிக வெளிச்சம் வருவதில்லை. இது ஏன் தெரியுமா? நன்கொடையளிப்பவர் டியூப் லைட் மீது பெரிதாகத் தன் பெயரை எழுதிக் கொடுப்பதால்தான் — சிலம்பொலி செல்லப்பன் வெளிச்சம்போட்டுக் காட்டிய விஷயம்.

2. தமிழ்நாட்டுக்கு வெளியில் மட்டும் சுமார் ஒரு கோடித் தமிழர்கள் வாழ்கிறார்கள். அதிக எண்ணிக்கையில் தமிழர்கள் வாழ்வது சென்னையில். சரி! இரண்டாவது? ஆச்சரியப்படவேண்டாம். பெங்களூர். மூன்றாவது? பம்பாய். அடுத்தது? மதுரை — விவரம் தந்தவர் — அமைச்சர்நெடுஞ்செழியன்.

3. வங்கித் தொழில் தமிழ் அகராதி வெளியீட்டு விழா. பேசிய இரண்டு அதிகாரிகள் தமிழ்ப் பேச்சை அப்படியே ஆங்கிலத்தில் எழுதி வைத்துக் கொண்டு. குறில், நெடில் வித்தியாசம் தெரியாமல் பேசியது (படித்தது என்பது தான் சரி.) கொடுமையிலும் கொடுமை. பாவம் அவர்களுக்கும் சிரமம். கேட்டவர்களுக்கும் Siramam.

4. கல்கத்தா தமிழ்ச்சங்கத்தின் தலைவர் பதறி வந்திருந்தார். நிருபர்கள் கூட்டம். சங்கத்தின் வெள்ளி விழாவை மார்ச்சில் விமரிசையாய்க் கொண்டாடவிருக்கிறார்களாம். தமிழ் எழுத்தாளர்கள் தவிர குஜராத்தி, வங்காளி, இந்தி, மராத்தி

யைப் பாராட்டிக் கொண்டும் வந்திருந்தான் தானுரவி. விக்கிரமண்ணனுக்குப் புதியதொரு கோலத்தையும் பெயரையும் உருவாக்கித் தந்த கடம்பமாதேவி, 'வேடப் பொருத்தம் மட்டும் போதாது; அதைவிடவும் நடிப்புத்தான் முக்கியம்' என்று எச்சரித்து அவனுடைய உடையோடு நடையையும் பாவனைகளையும் கூடப் பெயருக்கேற்ற விதத்தில் மாற்றிக் கொள்ளக் கற்றுத்தந்தாள். விரைப்பான தோற்றத்தையும் நடையையும் கடுமையான சுபாவத்தையும் கொடூரப் பார்வையையும் பழக்கத்துக்குக் கொணர்ந்திருந்தாள்.

இத்தனை எளிதாக சேரமான், நம்பியின் பரிந்துரையை ஏற்றுத் தன் யோசனைக்கு இணங்குவான் என்று விக்கிரமண்ணன் எதிர் பார்க்கவேயில்லை.

''சோணாட்டில் ஆதித்தனையும் பட்டத்தரசியையும் சிறைக் கூடக் காவலரையும் நம்பியையும் தவிர வேறு யாருக்கும் விக்கிரமண்ணன் தப்பியது தெரியாது. இந்நான்கு தரப்பினரும் அதை வெளியிட்டு அரசாட்சிக்கு அவமானத்தையும் இழுக்கையும் தேடித் தரப் போவதில்லை. பாதாளச் சிறையில் நீ வாடுவதாகவே எல்லோரும் எண்ணி இருக்கும்போது நீ மாறுவேடத்தில் மீண்டும் தஞ்சை சென்று மன்னரின் நன்மதிப்பைப் பெற்றுத் தளபதியாக உயர்வது சாத்தியமே. யாரும் சந்தேகிக்க மாட்டார்கள்'' என்று கூறிக் கடம்பமாதேவியின் பொறுப்பில் இவனை ஒப்படைத்தான் தானுரவி. அவளும் தன் ஆற்றலையெல்லாம் செலுத்தி இரண்டொரு தினங்களிலேயே அவனைப் புதிய பிறவி எடுக்கச் செய்து விட்டாள்.

செப்பு ஓய்ந்ததும் நம்பிக்குக் குலாந்தகனை விக்கிரமண்ணனாக மறுபடி அறிமுகப்படுத்தி அவரைக் கரைகாணா வியப்பில் ஆழ்த்திய சேரமான் சற்றுக் கடுமையாகவே பேசினான்.

''நம்பி! தாங்கள் பரிந்துரைப்பதால்தான் இந்த அபாயகரமான காரியத்தில் இறங்குகிறேன். உண்மை அம்பலமாகி வஞ்சிக் கோனால் தான் வஞ்சிக்கப் பட்டதாக ஆதித்தன் கருதுவானேயானால் எத்தகைய விபரீதமான பின் விளைவுகள் ஏற்படக்கூடும் என்பதைச் சிந்தித்துப் பார்த்திருப்பீர்கள் என்று நம்புகிறேன்!''

''பிரபோ! விக்கிரமண்ணனின் பக்கபலம் இன்று ஆதித்தனுக்கு அவசியத்தேவை. சில காலம் சென்று குலாந்தகனின் வேடம் கலைந்தாலும் இந்த மோசடி ஒரு பெரிய நன்மை கருதியே என்றறியும்போது மன்னர் எம்மை மன்னித்து விடுவார் என்பது நிச்சயம். விக்கிரமண்ணனின் தோற்றம் மாறினாலும் விசுவாசம் மாறப் போவதில்லை. அது மாறாத வரை நமக்குக் கவலையும் இல்லை.''

''அப்படியானால் சரி'' என்றான் சேரமான்.

நம்பிக்கே தன்னை அடையாளம் தெரியவில்லை என்னும்போது ஆதித்தனையும் அவன் நலன் கருதியே ஏய்ப்பது எளிதாகவே இருக்கும் என்று நம்பி வந்திருந்தான் குலாந்தகனாக உருமாறியிருந்த விக்கிரமண்ணன். 'ஆனால் இது என்ன... வெண்ணெய் திரண்டு வரும் போது தாழி உடைந்த கதையாகத் தானுரவி சற்றும் யோசியாமல் நம்பியாண்டார் நம்பி ஏமாந்து போன நிகழ்ச்சியைக் குறித்துப் பேச ஆரம்பிக்கிறாரே! ஆதித்தனுக்குச் சந்தேகம் எழாதிருக்க வேண்டுமே' என்று கலங்கினான். கடம்ப மாதேவியின் முகத்திலும் கவலை ரேகைகள் படரக் கண்டு அவன் அச்சம் அதிகரித்தது.

(தொடரும்)

# KODUMAI

எழுத்தாளர்களையும் குத்து விளக்குத் தந்து கௌரவிக்கவிருக்கிறார்களாம். வாழ்த்துக்கள்!

5. அமைச்சர் காளிமுத்து திரைப்படமொன்றுக்கு வசனமெழுத இருக்கிறார். பெயர்: உழைக்கும் வர்க்கம். மேடைப் பேச்சிலிருக்கும் வீரம் வசனத்தில் வருமா?

6. ''சென்ற வாரம் ஞாயிறன்று டி. வி. யில் காட்டிய 'ரத்ன குமார்' திரைப்படத்தின் டிரெய்லர் பிரமாதம். முழுப் படத்தையும் காண ஆவலாய் இருக்கிறோம்'' என்று ஒரு நேயர் கடிதம் எழுதியிருந்தார் சென்னை டி. வி. நிலையத்துக்கு. காரணம் — முழுப் படம் என்று அவர்கள் ஒளி பரப்பியதில் ஏகப்பட்ட இடங்களில் வெட்டுகள். அதுதான்.

7. இது ஒரு கிசுகிசு. ஒரு புகைப்படக்காரர் அட்டைக்கென சில நடிக நடிகையரின் வண்ணப்படங்கள் எடுத்து — ஒரு பத்திரிகையில் கொடுத்தாராம். கொஞ்ச நாட்கள் கழித்துப் புகைப்படக்காரரிடம் அவர் தந்த வண்ணப்படங்கள் காணமற் போய்விட்டது என்று சொல்லிவிட்டார்களாம். சமீபத்தில் சில காலண்டர்களில் அதே படங்களைப் பார்த்ததும் அவருக்கு ரொம்ப அதிர்ச்சி.

அப்புறம் அவருக்குத் தெரிய வந்த விஷயம்: பத்திரிகை அலுவலகத்தைச் சேர்ந்த ஒருவர் அந்த வண்ணப்படங்களை சிவகாசியைச் சேர்ந்த காலண்டர் தயாரிப்பாளரிடம் விற்று விட்டார் என்பது.

-சின்னகொலம்பஸ்



# கோகுலம் வெகுமதி திட்டம்

உங்களுக்குப் பிடித்தமான ஏதேனும் ஒரு பள்ளிக்குக் கோகுலம் உங்களுடைய அன்பளிப்பாகக் கிடைக்கச் சந்தா அனுப்புமாறு கோரியிருந்தோம். குழந்தைக் குலத்தைக் குதூகலிக்கச் செய்யப் பின்வருவோர் முன்வந்துள்ளனர்.

| | |
|---|---|
| 1. ஜி. ஆர். ராமசாமி<br>புரசவாக்கம், சென்னை. | ராமகிருஷ்ண மிஷன் ஹையர் செகண்டரி ஸ்கூல் (மெயின்),<br>சென்னை-17. |
| 2. ஸ்ரீமதி புஷ்பா கந்தசாமி,<br>கவுண்டனூர், சேலம். | ஆரம்பப் பாடசாலை,<br>சேத்தராம்பட்டு கிராமம், வடஆர்க்காடு. |
| 3. ஜி. பாரதி,<br>காங்கயம், பெரியார் மாவட்டம். | பஞ்சாயத்து யூனியன் மிடில் ஸ்கூல்,<br>காங்கயம். |
| 4. ச. வி. பழனிவேல்,<br>தூத்துக்குடி. | ராமகிருஷ்ண மிஷன் ஆசிரமம்,<br>சென்னை-17. |
| 5. வி. செல்வராஜன்,<br>மீன்பாறை. | பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பாடசாலை,<br>தோப்பம்பட்டி, பழனி தாலுகா. |
| 6. ஏ. விசுவநாதன்,<br>பெரியமுத்தூர், கிருஷ்ணகிரி. | பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பாடசாலை.<br>பெரியமுத்தூர், கிருஷ்ணகிரி. |
| 7. எஸ். கண்ணன்,<br>அரும்பாக்கம். | கோலப் பெருமாள் செட்டி வைஷ்ணவ ஹையர் செகண்டரி ஸ்கூல்,<br>சென்னை-106. |
| 8. இமயன்,<br>பெங்களூர். | திருவரல்குளம் பஞ்சாயத்து யூனியன் மிடில் ஸ்கூல்,<br>சேந்தன்குடி, புதுக்கோட்டைமாவட்டம் |
| 9. ஸ்ரீமதி ராமலக்ஷ்மி ரவிசங்கர்,<br>ஆய்க்குடி, செங்கோட்டை. | கார்ப்பரேஷன் பெண்கள் பள்ளி,<br>சென்னை-84. |
| 10. எஸ். கோபாலகிருஷ்ணன்,<br>சூளை, சென்னை. | பாலமந்திர்,<br>சென்னை-17. |
| 11. ஆர். அன்பழகன்,<br>பண்ருட்டி. | நாகமலை பாலர் இல்லம்,<br>நாகமலை, புதுக்கோட்டை. |
| 12. ஆர். பாலவெங்கடேசன்,<br>கோபி செட்டிப்பாளையம். | ஹரிஜன் ஹாஸ்டல்,<br>கோபிசெட்டிப்பாளையம். |
| 13. எம். ராஜா,<br>சென்னை-86.<br>(9 சந்தாக்கள்) | ஸ்ரீமதி கமலாட்சியம்மாள் பெண்கள் அநாதை விடுதி,<br>சென்னை-1.<br>அவ்வை ஹோம் அநாதை விடுதி,<br>சென்னை-20.<br>சேவா சமாஜம் பெண்கள் விடுதி,<br>சென்னை-8.<br>சேவா சமாஜம் குழந்தைகள் விடுதி,<br>பள்ளிப்பட்டு, சென்னை-20.<br>சில்ட்ரன் கார்டன் ஸ்கூல்,<br>சென்னை-4.<br>சிவானந்தா சேவாசிரமம் அநாதை விடுதி,<br>காட்டான்கொளத்தூர், செங்கல்பட்டு.<br>ராமகிருஷ்ண குடில்,<br>திருப்பராய்த்துறை.<br>பாலமந்திர்,<br>சென்னை-17.<br>தீனபந்து ஆசிரமம்,<br>ராணிப்பேட்டை. |



(பட்டியல் தொடரும்)

# வளரும் குழந்தைகளுக்குத்




**காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.**

1. ஃபாரெக்ஸ் புரதச் சத்து நிரம்பியதாகும் —உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

2. ஃபாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

3. ஃபாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் சேர்ந்திருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

4. தவிர ஃபாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

**ஃபாரெக்ஸ்®**

வழங்குவோர் **க்ளாக்ஸோ**

CASGLF-42 183 TM

# ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்

## வையவன்

**16**

"ஜெயா ஒங்களுக்காக பயந்துகிட்டே காத்துக்கினு இருக்கும்" என்றாள் எஸ்தர்.

காசி முன்னே நடந்து கொண்டிருந்தான். ஈஸ்ட் கேபினைத் தாண்டி ஜங்ஷனின் ஸர்ச்–லைட் வெளிச்சத்தின் வெள்ளத்தைக் கடந்து கொஞ்சம் இருட்டைத் தேடிக்கொண்டு ரயில்வே லைன் ஓரமாக அவனைப் பின் தொடர்ந்தவாறே எஸ்தர் வந்து கொண்டிருந்தாள்.

"பயப்படமாட்டா. காத்துக்கிட்டிருப்பா."

அவன் ஆச்சரியமாக, "அப்படியா... பயப்பட மாட்டா?" என்று திருப்பிக் கேட்டான். "காலையிலே அந்த லாரி விஷயத்தைச் சொன்னேனே. அப்பக்கூடவா பயப்படாது?"

அவன் ஒரு கற்குவியலைக் கடந்தான்.

"ஆமா... அவளுக்கு ஒரு முரட்டுத் தைரியம் உண்டு."

"அதனாலே தான் வில்வத்தைப்பார்த்து அப்படி நேருக்கு நேர் கேட்டாளோ?"

"ம்ம்."

"அங்கே ஒரு 'கல்வெர்ட்' தெரியுதே. அங்கே உட்காரலாமா?"

"சரி."

இருபுறங்களிலும் ஜோலார்பேட்டையின் விளக்கொளி தொலைதூரத்தில் தயங்கி நின்றது.

"இதுக்கு மேலே 'போக வேணும். லோகோ ஷெட்."

அந்த 'கல்வெர்ட்'டின் அருகில் சென்று அதன்மேல் படிந்திருந்த தூசையும் குப்பையையும் கைக்குட்டையால் தட்டித்தட்டி காசி தூய்மைப்படுத்தினான். அங்கே எஸ்தர் தேடிய கொஞ்சம் இருட்டு இருந்தது. ஏதோ ஒரு எக்ஸ்பிரஸ் சீறிக்கொண்டே அந்த இருட்டை வெட்டிப் பிரித்து வெளிச்சத் தீவுகளை விட்டு விட்டு உருவாக்கிக் கொண்டு அவர்களைக் கடந்தது.

ரயில் பெட்டிகளில் சில முகங்கள் அவர்களைத் திரும்பிப் பார்த்தன. பார்த்துக் கொண்டே அகன்றன. பெட்டிகளின் வெளிச்சத் தீவுகள் மிதந்தவாறே தொலைவில் ஓடுவதை எஸ்தர் வேடிக்கை பார்த்தாள்.

காசி உட்கார்ந்து விட்டான்.

எஸ்தர் அந்த எக்ஸ்பிரஸின் கார்டுவண்டி தாண்டி அதன் பின்னால் எரியும் சிவப்பு விளக்கின் வெளிச்சம் புள்ளியாகி ஜங்ஷன் ஒளியில் சங்கமிக்கிற வரை அதை வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றாள்.

"இருட்டுலே நின்னுக்கிட்டு ஓடற ரயில் வெளிச்சத்தைப் பார்த்தா ரொம்ப அழகா இல்லே!"

"இப்ப நாம்ப என்ன பேசணும்?" என்று ஒரு நிதானமான குரலில் கேட்டான் காசி. எஸ்தருக்குச் சுருக்கென்று உறைத்தது.

"ஒங்களுக்கு இங்கே வந்தது பிடிக்கலியா?"

அவன் பதிலளிக்கவில்லை.

"அப்ப வாங்க... போயிடுவோம்..."

"நீ வந்து உக்காரு."

அவன் குரல் கரகரத்தது.

எஸ்தர் தன் இடுப்பில் செருகியிருந்த கர்ச்சீப்பை அவனுக்குப் பக்கத்தில் விரித்துவிட்டு அதன்மேல் உட்கார்ந்தாள். 'இவ்வளவு நெருக்கமாகவா?' என்று காசி நினைத்தான். கொஞ்சம் ஒதுங்கி உட்கார வேண்டும் என்று அவனுள் ஓர் உந்துதல் ஏற்பட்டது. எஸ்தர் விகல்பமாக எடுத்துக்கொள்வாள் என்று அதைத் தவிர்த்தான்.

அவளிடமிருந்து ஒரு நறுமணம் வந்தது. பவுடரோ... செண்ட்டோ... ஹேர் ஆயிலோ... அல்லது அந்த நெருக்கத்துக்கே ஒரு மணம் இருந்ததோ?

"ரொம்பத் துணிச்சல்காரின்னு தோணுதா?"

"ஏன் அப்படிக் கேட்கறே?"

"இப்படி பக்கத்திலே வந்து உக்காரறேனே"

---

ஒருநாள் நபிகள் நாயகம் அவர்களிடம் ஒருவன், "ஐயா! தாங்கள் பகுத்தறிவை நம்பும் அதே நேரத்தில் விதியையும் நம்புகிறீர்களே? அது ஏன்?" என வினவினான். அதற்கு நபிகள் நாயகம் ஒரு உதாரணத்தின் மூலம் அவனுக்கு விளக்க எண்ணினார். உடனே அவர் "அன்புள்ளவனே! நீ இரு கால்களாலும் நின்று கொண்டிருக்கிறாய். இப்போது ஒரு காலை மேலே தூக்கிக் கொள்" என்றார். அவனும் அவ்வாறே செய்தான். பின் மறுகாலையும் தூக்கிக் கொள்ளச் சொன்னார். "அது எப்படி சாத்தியம் ஐயா?" என்றான் அவன். உடனே நபிகள் நாயகம் அவர்கள் "நீ ஒரு காலைத் தூக்கிக்கொண்டு நின்றாயே அது பகுத்தறிவுக்கு ஒப்பான செயல். ஆனால் மறுகாலையும் தூக்கிக் கொண்டு நிற்க முடியாதது தான் விதியாகும். எனவே, இரண்டையும் நம்புகிறேன்" என்றார்.

இலங்கை வானொலி சொற்பொழிவில் கேட்டவர்: —டி. ராமமூர்த்தி.

''அதுக்கா? அப்படித் தோணலே... ஆனா பயமா இருக்குது.''

''ஏன்?''

''நீ எங்க வாத்தியார் மகள். எஞ்ஜினியர் பீட்டருக்கு அக்காப் பொண்ணு.''

''அப்படியா?'' அவன் இன்னும் கொஞ்சம் நெருங்கி வந்து உட்கார்ந்தான். இப்போது அவனுடைய தோள் அவளது தோளின் மீது உரசிற்று.

''அட... சொல்லிக்கிட்டே கிறேன். இன்னும் கிட்ட வந்து உக்காந்தா...?'' காசி எழ முயன்றான்.

எஸ்தர் அவன் தோள் மீது தலைசாய்த்துக் கொண்டாள். அவளது கூந்தலிலிருந்து அந்த வாசனை வந்தது. எஸ்தரின் கன்னத்தின் வழுவழுப்பு அவன் தோள்பட்டையில் சிலிர்ப்பை ஏற்படுத்திற்று.

''எஸ்தர்'' என்றான்.

கண்களை மூடிக் கொண்டே அவள் ''ம்ம்...'' என்று பதிலளித்தாள்.

''ஒனக்கு பயமா இல்லே.''

''யார் கிட்டே?''

''என் கிட்டே.''

''ம்ஹூஹும்.''

''உங்க மாமா...'' அவன் தொடங்கியதும் அவள் இடைமறித்தாள்.

''எங்க மாமா... எங்க அப்பா... ஒங்க ஜோலார்பேட்டை... அந்த வில்லம்.... நீங்க... யார் கிட்டேயும் எனக்குப் பயமில்லே.... நான் திருட்டுத்தனமா பண்றேன்?''

''இருட்டுக்கு வந்தா திருட்டுத்தனம் தான்.''

''அப்ப வாங்க... ஜங்ஷனுக்குப் போயி பிளாட்பாரத்திலே சிமெண்ட் பெஞ்சி இருக்கில்லே... அங்கே கூட வந்து இப்படியே தான் உட்காருவேன்.''

எஸ்தர் அவன் தோள் மீது தன் மோவாயை வைத்து அவன் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள்.

''நான் பயப்படறேன். எனக்காக இல்லே... ஒனக்காக.''



இப்போது அவள் உதடுகள் அவனுக்கு வெகு அருகில் இருந்தன. அவள் விடுகின்ற மூச்சு அவனுடைய உதட்டிலும் கன்னத்திலும் சூடாக, ஒரு தனி மணத்தோடு, அவளுக்கே உரிய மணத்தோடு உரசிச் சென்றது.

அந்த நேரத்தில் அவளை என்ன செய்தாலும் அவள் தடுக்க மாட்டாள். செய்கிற ஒவ்வொரு செயலையும் விரும்புவாள். அதில் லயித்து மூழ்கி விடுவாள். காசிக்கு அது தெளிவாய் விளங்கிற்று. அவனுக்குள் இருந்த ஆண்மை விழித்துக் கொண்டது. நுரைத்துப் பெருகும் புதுவெள்ளம்போல் அது பொங்கிற்று.

காசி அதைக் கட்டுப்படுத்திக் கொண்டான். அவளைத் தொடலாம். அணைக்கலாம். முத்தமிடலாம். அவளது கன்னத்தோடு கன்னத்தை இழைத்து அவளது மேனியின் ஒவ்வொரு மென்மையிலும் அமிழ்ந்து மூழ்கி, ஒன்றி, கரைந்து, உருகி, உருவிழந்து உணர்விழந்து பின்பு உயிர்த்து விடலாம். ரொம்பச் சுலபம்தான்.

அதில் ஒரு பொறுப்பு உண்டு. செய்கிற ஒவ்வொரு செயலுக்கும்... அவளுக்குள் தான் பதிக்கிற ஒவ்வொரு முத்திரைக்கும் பொறுப்பு உண்டு. அதுவும் ஜெயாவிடம் அவன் மனசில் கட்டி வைத்திருந்த ஒரு மணல் வீடு சிதைகிற மாதிரி பேசிய பின்பு ஒரு பொறுப்பு உண்டு.

வில்லவம் தூரத்தில் எங்கோ ஒரு மறைவிடத்திலிருந்து சிரித்துக் கொண்டிருக்கிறான். ஒருவேளை அவனுக்கு வெற்றி கிடைத்துவிடலாம். அப்போது இவளிடம் பதித்த ஒவ்வொரு முத்திரைக்கும் என்ன அர்த்தம்?

''என்ன யோசனை?'' என்று கேட்டுக் கொண்டே எஸ்தர் தன் மூக்கால் அவன் கன்னத்தில் இடித்தாள்.

அவன் அவளை ஆரத்தழுவி, எந்த உரிமையோடு இவ்வளவு நெருங்கி வந்து அமர்ந்து அவன் மீது சாய்ந்திருக்கிறாளோ அந்த உரிமைக்கு ஓர் உத்தரவாதம் அளித்து அந்த உதடுகளோடு ஐக்கியமாவதை விரும்பினான். இவள் தன் ஒருவனைத் தவிர வேறு எதையும் பொருட்படுத்தவில்லை என்று முழுப் பக்குவமான மனோ நிலையில் ஒரு சரியான ஆண் நிச்சயிப்பதைப் போல் அவன் நிச்சயித்தான். அவளிடம் மயக்கமுற்று அவளைத் தழுவத் துடித்த எத்தனையோ பெண்களுக்கும் இவளுக்கும் வித்தியாசமிருக்கிறது. அவர்கள் கவர்ந்து கொள்ள விரும்பினார்கள். இவள் வழங்கத் தயாராக இருக்கிறாள்.

அந்த வித்தியாசமே காசியை மேலும் எச்சரிக்கை செய்தது.

''எஸ்தர்.''

''ம்ம்.''

அவள் அவன் தோளிலிருந்து மார்பில் இறங்கி மடிக்கு வந்தாள்.

''எழுந்திரும்மா.''

அவன் ஒரு பெண் குழந்தையிடம் பேசுவது போல் சொன்னான்.

''ம்ஹூம்ஹூம். மாட்டேன்.''

''ஒவ்வொரு செகண்ட்லயும் எனக்குச் சாவு காத்திருக்கு.''

அவள் பளிச்சென்று மடியின் மீதிருந்து எழுந்தாள்.

''அதுக்குத்தான் பயப்படறீங்களா?''

இருளில் அவன் சிரித்தான். பற்கள் மங்கிய வெள்ளையாகத் தெரிந்தன.

''பைத்தியம் மாதிரி சொல்லக்கூடாது. சாவுக்குப் பயப்படறதுதான் பெரிய பைத்தியக்காரத்தனம். அது வரும். இன்னிக்கு விட்டா நாளைக்கு... இல்லே, கொஞ்ச நாள் கழிச்சு... பயந்து என்ன புண்ணியம்? அதான் வரப் போவுதே...''

அவன் சொன்னது எளிமையாக இருந்தது. அதைப்பற்றி எப்போதோ யோசித்து இவன் தயாராக இருக்கிறான் என்று பளிச்சென்று புலப்பட்டது.

''அப்ப... அத்துக்குள்ளே வாழ்ந்துடணும் இல்லே?'' அதைச் சொன்னதும் அதில் தன்னை மீறித் தொனித்து விட்ட ஒரு தப்பர்த்தத்தை உணர்ந்து அவள் சட்டென்று நாக்கைக் கடித்தாள்.

''ஆமா... அதுக்கு... வாழறதுக்குத்தான் பயப்படணும். சாகறதுக்கு இல்லே.''

''நான் ஒங்களைத் தைரியசாலின்னு நெனச்சேன்.''

''அவசரப் படறவன் தான் தைரியசாலின்னு சொல்றியா?''

அவளுக்குப் பதிலளிக்கத் தோன்றவில்லை.

''என்னாலே அவசரப்படவும் முடியும். நிதானமா இருக்கவும் முடியும். ஜெயாவை விட்டுட்டு என்னாலே அவசரப்பட முடியலே. உனக்காகவும் நான் அவசரப்படலாம்.... ஆனா அது நான் சாவுக்குப் பயந்துட்டதா முடியும்.''

இப்போது எஸ்தர் சற்று விலகி உட்கார்ந்தாள். ஒரு கூட்ஸ் வண்டி அவர்களைக்கடந்து கொண்டு சுமை ஏற்றிய சோகத்தோடு போவது போல் நீண்ட பெருமூச்சோடு இழுக்கே தடக் தடக்கென்று வெகு நீளமாய் இரண்டு மூன்று நிமிஷத்துக்கு ஓடியது. அது கடந்து தூரத்தில் ஒரு வேதனை ஓலம் போல் கத்தி மறையும் வரை இருவரும்

---

நண்பன்: தேன் நிலவுக்கு நீ ஊட்டிக்குப் போகணும்னு, உன் மனைவி காஷ்மீர்க்குப் போகணும்னு வாக்குவாதம் செய்து கொண்டிருந்தீங்களே கடைசியிலே எங்கே போனீங்க?

மற்றவன்: நான் ஊட்டிக்கும், அவ காஷ்மீருக்கும் போய்வந்தோம்!



அதையே பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்தனர்.

காசிக்கு அவளைத் துன்பம் அடையச் செய்து விட்டது போல் ஓர் உணர்வு தோன்றிற்று. இப்படியெல்லாம் எப்போ திருந்து தான் நினைக்க ஆரம்பித்தோம் என்று அவன் ஆச்சரியப்பட்டான். ஜங்ஷனில் எத்தனையோ ஜோடிகள் காதல் செய்தன. ஓடிப் போயின. கல்யாணம் செய்து கொண்டன. தற்கொலை செய்து கொண்டன. காதல் காதல் என்று எந்தச் சினிமாவைப் பார்த்தாலும் ஒரே காதல் ஓலம். இதுதானா அது?

இதற்குப் பெயர்தான் காதலா?

இப்படியெல்லாம் அது ஒருவனை நினைக்கச் செய்து, இந்த மாதிரி தான் அவஸ்தை தருமா? இந்த அவஸ்தைகளுக்காகவா எல்லோரும் இப்படிப் பறக்கிறார்கள்... ஒரு வேளை ஒவ்வொருத்தருக்கு அது ஒவ்வொரு மாதிரியோ...

ஜெயாவுக்கு அது என்ன மாதிரியோ? அது நொறுங்கித் தூள் தூளாகப்போகு மளவு அன்று பேசியது அவளுக்கு என்ன சூன்யத்தை ஏற்படுத்திற்றோ? பொறுக்க முடியாமல் தான் மேம்பாலத்துப் படிக்கட்டில் வில்வத்தைப் பார்த்ததும் பொங்கி வெடித்து விட்டாளோ? காசிக்கு வேதனையாக இருந்தது.

உலகில் அதுவரை தோன்றிய சகல காதலர்களின் மீதும், அப்போது காதலித்துக் கொண்டிருக்கிறவர்கள் மேலும் அவனுக்கு வேதனை பிறந்தது. பரிதாபம் ஏற்பட்டது.

எஸ்தரின் மீது மிகவும் பரிவு கொண்டான்.

''ஒன்னை வருத்தப்படுத்திட்டேனா?''

அவள் என்ன எதிர்பார்த்து இங்கே வந்தாளோ? எதையும்... எந்த அபாயங்களையும் பொருட்படுத்தாமல் சகலத்தையும் துறந்து எதற்கு இங்கே வந்தாளோ...அதை அவள் வேண்டிய முழுமையான அன்பை பிரியத்தை... ஏன்... முழுக்கத் தன்னையே இந்தக் கணத்தில் இவளுக்கு வழங்கிவிடலாம்.

''இல்லே'' என்று நீண்ட மௌனத்திற்குப் பின் அவள் சொன்னாள்.

''ஒன்னு சொல்லட்டுமா... இந்தமாதிரி நேரத்திலே ஒவ்வொரு ஆம்பிள்ளையும்....''

அவள் குறுக்கிட்டாள். ''உஸ்ஸு.... ஒன்னும் சொல்ல வேணும். எல்லாம் புரியுது. அப்பவிட இப்பதான் ஒங்களை எனக்குப் புடிக்குது...''

அவனுக்கு அங்கு நிலவிய உணர்ச்சிகளின் கனத்தைக் குறைக்கத் தோன்றிற்று.

''ஹரிக்கு என்னை ஒண்டியா அனுப்பவே இஷ்டமில்லே... நீ வரலேன்னா அவன் கூடவே வந்திருப்பான். பாடி கார்டு மாதிரி.''

''போகலாமா...?'' அவன் கேட்டான்.

''ஐயைய... நான் போகணும்கறதுக்காக சொல்லலே. அப்பிடி ஒருத்தன் பாடிகார்டு மாதிரி கூட வர்றது எனக்கு அசிங்கமா இருக்குது. எப்பப் பார்த்தாலும் எதுவோ நடந்துடும்னு தொடை நடுங்கியாட்டம்



திருடன்: மரியாதையாய்ப் பணத்தை எடு!

மற்றவர்: எடுக்காட்டி என்னடா செய்வே? ஆங்!

திருடன்: அப்படி மிரட்டிக் கத்தாதிங்க. நான் தொழிலுக்குப் புதுசு!

---

ஒருத்தனைக் கூட வச்சுக்கிட்டு சுத்தறா மாதிரி ஒரு நெனப்பு...''

அவன் பெருமூச்சு விட்டான்.

''ஒங்ககிட்டே இன்னும் ஒன்னு சொல்லலே நானு...''

''என்னது?''

லேசாகக் குளிர்க் காற்று அடித்தது.

அவள் முந்தானைத் தலைப்பை எடுத்துப் போர்த்திக் கொண்டிருந்தாள். அவள் அணிந்திருந்த கண்ணாடி வளையல்கள் கிணுகிணுத்தன.

அவள் இதுவரை கண்ணாடி வளையல்களை அணிந்ததில்லை என்று அதைப் புதிதாகக் கவனித்தான் காசி.

''என்ன இன்னிக்கு வளையல் போட்டிருக்கே?''

''அப்பாடா... இப்பதான் அதைக் கவனிச்சீங்களா?''

காசிக்குக் கண்ணாடி வளையல்களை மிகவும் பிடிக்கும். அவை பெண்களின் கரங்களில் நிறைய அடுக்கிப் போடப்பட்டுக் கைவீசும் போது, அசையும் போது அந்த ஓசையை அவன் மிகவும் ரசிப்பான்.

''ஜெயா கையிலே வளையல் போட்டிருந்தது. அதைத் தடவித் தடவிப்பார்த்துக்கிட்டிருந்தேன். ஹரி கிட்டே வளையல் சைஸு கேட்டு வாங்கி யாரச்சொல்லி ரெண்டு டஜன் வாங்கிக் குடுத்துது...''

''ஜெயாவா குடுத்தனுப்பிச்சா?''

அவன் ஆச்சரியத்தோடு கேட்டான்.

''ஆமாம்... மாமாவுக்கு ஒரே கோவம்... என்ன எவனோ வந்து சைஸ் வளையல் வாங்கிட்டுப் போறான்னு... ப்ச... நான் ஜெயாவ பத்தி பயர்மேன் கேசவன் பொண்ணுன்னு சொன்னேன்...''

''என்ன சொன்னாரு.''

''ஒங்க அப்பாவுக்கு லெட்டர் போட்டிருக்கேன். அவர் வந்ததும் நீ பொறப்படுன்னு சொன்னாரு?''

''அதான் நீ சொல்ல வந்ததா?''

''ஆமாம்'' என்றாள் எஸ்தர்.

தூரத்தில் ஓர் ஒற்றை எஞ்சின் அலறிற்று.

(தொடரும்)

# புரியாத புதிர்!

உமாமகேஸ்வரி

நழுவிச் செல்லும் இரவை, ஒரு குழப்பத்துடன் வழி அனுப்பிக் கொண்டிருந்தாள் அருணா.

நாளைய மறுதினம் கல்யாணம். அதற்குள் செயல்பட வேண்டும். ஆனால் வழி ஏதும் புலப்படவில்லை.

இந்தக் கல்யாணத்தைக் கண்டிப்பாக நிறுத்தணும்—

'ஏன் நிறுத்தணும்?'—

தெரியவில்லை...

'எப்படி நிறுத்தணும்'—

அதுவும் தெரியவில்லை.

மனம் மிகவும் குழம்பிவிட்டது. விடிவதற்குச் சில மணி நேரங்களே பாக்கி இருந்தன. அதற்குள் செயல்பட வேண்டும். தன் அறையை விட்டு வெளியே வந்துபார்த்தாள் அருணா.

கல்யாணத்திற்காக வந்திருந்த சுற்றத்தினர் தாறுமாறாக உருண்டிருந்தனர்.

'ஓ... எனக்கு இத்தனை உறவா?...ஆனால் ஒன்றுமே மனத்தை நெருங்கி வரவில்லையே...'



நடுவில் இருந்த ஊஞ்சலில் மல்லாந்து படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார் ராமச்சந்திரன். ஒரே சீராக வரும் மூச்சிலிருந்து உறக்கத்தின் ஆழ்ந்த தன்மை புரிந்தது.

''அப்பாவை எழுப்பி... இந்தக் கல்யாணத்தை, நிறுத்திடேன்னு... சொல்லிடலாமா...?' எல்லா அப்பாவைப் போல் இல்லை அவர். பெண்கள் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்பவர். ஆனால்—

''ஏம்மா அருணா... உனக்கென்னாச்சு... திடீர்னு இப்படிச் சொல்றே... நானா ரகுவைப் பண்ணிக்கச் சொன்னேன்?.... நீயாதானே சந்தோஷமா கேட்டே.... ரகு என்ன நமக்கெல்லாம் முன்பின் தெரியாத பிள்ளையா...? எங்க மனசுல இருந்ததை நீயா கேட்டபோது ரொம்ப சந்தோஷப்பட்டுச் சரின்னோம்... இப்ப இப்படிக் கடைசி நிமிஷத்தில் கல்யாணம் வேண்டாம்னு... அதுக்கான காரணம் என்ன? அதைச் சொல்லு முதல்ல....''

அப்பா கேட்கப் போகும் கேள்வி நியாயமானதுதான். ஆனால் பதில்தான் என்ன சொல்வது? எப்படிச் சொல்வது என்று புரியவில்லை. அம்மாவை எழுப்பிச் சொல்லி விடலாமா...?

''ஊஹூம்...அம்மாவுக்கு நான் பேசுவது புரியவே புரியாது. அதிகாரத்துக்கு அடிபணிய மட்டுமே தெரியும் அவளுக்கு... மனத்தில் பூ போன்ற ஒரு பகுதி இருப்பதே அவளுக்குத் தெரியாது...''

மன்னியை எழுப்பிச் சொன்னால் — மூன்றும் மனுஷி போல் வேடிக்கை பார்ப்பாளோ?

ஒருவேளை இந்தக் கல்யாணம் நடந்து விட்டால் — நினைக்கவே அடம் பிடித்தது மனம்.

'எனக்கென்னச்சு... நேற்று வரை சந்தோஷமாய் இருந்தவள்... இன்னிக்கு காலையிலிருந்து தான் இப்படி ஒரு குழப்பம்.... வீண நான் கற்பனை பண்ணிப் பார்த்து இருக்கக் கூடாது... நடக்கறது நடக்கட்டும்னு இருந்திருக்கணும்... இப்ப மனசைக் குட்டையா குழப்பிண்டு வெளில வரவும் முடியாம.... மூழ்கவும் தெரியாம... இதென்ன அவஸ்தை....?'

இந்து, அருணாவை விட ஒன்றரை வயது மூத்தவள். இரட்டைப் பிறவிகள் போல் காணப்பட்டார்கள் இருவரும். அருணா இளையவளானாலும், உடல்வளர்த்தியிலும், அறிவு வளர்த்தியிலும் இந்துவை விட ஒரு படி மேலேயே இருந்தாள். பார்ப்பவர்கள் அருணாவை மூத்தவள் என்று எண்ணுவதும் உண்டு. உருவத்தில் மட்டுமின்றி உள்ளத்திலும் ஒன்றி இருந்தனர் இருவரும். எங்கு சென்றாலும் இணைந்தே சென்றனர். அவர்களுக்குள் ரகசியங்களே இருந்ததில்லை. இந்து விரும்பியதை அருணாவும் விரும்பினாள். அருணா வெறுத்ததை இந்துவும் வெறுத்தாள். ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து எங்கும் சென்றதே இல்லை. இந்து இருக்குமிடத்திலெல்லாம் அருணாவும் இருந்தாள். அவர்களின் ஒற்றுமையைக்கேலி செய்யத் தாத்தா— ''தலை வந்தாச்சு... வாலைக் காணுமே... பின்னாலேயே தானே வரும். அது எங்கே... அதோ வர்ரது பார் வால்...'' என்பார்.

இந்துவைக் கல்லூரியில் சேர்க்க ராமச்சந்திரன் நிணறித்தான் போனார். அத்தனை குறைவான மார்க்கிற்குக் கல்லூரியில் இடம் கிடைத்ததிலிருந்தே அவருடைய அலைச்சல் தெரிந்தது. அருணாவும் அடுத்த ஆண்டு அதே கல்லூரியில் தன் தகுதியில், யாருடைய சிபாரிசும் இன்றிச் சேர்ந்தாள்.

''இந்தா... எங்கடி போனார் உங்கப்பா?.. மணி பன்னிரண்டாகப் போறது.... கார்த்தால வெறும் வயத்தோட போயிருக்கார்... இங்கே போறேன்... அது இதுனு சொல்ற வழக்கமே இல்லை... வயசாச்சுன்ற எண்ணமும் கிடையாது... 'பிளட் பிரஷர்' வேற... வரவர சொன்னதையே கேக்க மாட்டேன்றார்...'' அம்மாவின் அங்கலாய்ப்பு ஒய்வதற்குள், வேட்டி நுனியைக் கையால் பிடித்தபடி உள்ளே வந்த அப்பா—

''ருக்கு... ஏ... ருக்கு... சட்டுனுவா... ஒரு சந்தோஷ சமாச்சாரம் சொல்லப் போறேன்... அப்பா இல்லையாம் அந்தப் பையனுக்கு... அம்மா இருக்கா... நிறையச் சொத்து இருக்காம்... பையனும் உள்ளூர்லேயே நல்ல வேலைல இருக்கான்... கம்பெனி கார், வீடுன்னு கொடுத்து இருக்கா.... அந்தப் பிள்ளையோட அம்மா ரொம்ப நல்ல மாதிரியாத் தெரியறு... ஏதேதோ பேசிட்டுக் கடைசில பேச்சு கல்யாணத்தைப் பத்தி



வந்தது... அந்த அம்மா 'எங்களுக்குச் சீர், செனத்தி எதுவும் வேண்டாம்... பெண் அழகா முக்கியமா சின்ன வயசா இருக்கணும்... எனக்கிருக்கிறது இவன் ஒருத்தன் தான்... எங்கேயாவது நல்ல குடும்பமா இருந்தா சொல்லுங்கோன்னு' உடனே சபேசனே 'ஏண்டா ராமு... உன் மூத்த பெண் இந்துவைப் பார்க்கலாமே பத்தொம்பது வயசுதானே ஆறதுன்னுன்... எனக்கும் ஒரே சந்தோஷம்... அவா...''

''ஆனா... இந்து படிக்கணுமே... எவ்வளவு கஷ்டப்பட்டுக் காலேஜிலே சேர்த்தோம்...''

''எவடா இவ ஒருத்தி... ஒரு அம்மா, பொண்ணு ஸ்கூல் முடிச்சா விட்டே அப்பனைத் துளைக்க ஆரம்பிச்சுடறு ஜாதகக் கட்டத் தூக்குன்னு... இவ என்னடான்னா படிக்கணுமாம் படிக்கணும்...''

''இல்லேப்பா... நான் படிக்கணும்பா...''

''படியேன்... யார் வேண்டாம்னு.... நிறுத்தி நிதானமாகப் படி... கல்யாணம் பண்ணிண்டா, படிக்கக் கூடாதுன்னு யாராவது சொல்லி இருக்காளா என்ன?...

''நான் அந்தப் பிள்ளை கிட்ட இந்து படிக்கிறதைப் பத்திச் சொன்னேன்... அதுக்கு அவன் என்ன சொன்னான் தெரியுமோ? 'படிக்கட்டுமே... நானே டியூஷன் சொல்லித் தரேன்னான்...' அவா வீட்டிலே ஜாதகம் பார்க்கிற பழக்கம் இடையாதாம்.... இன்னிக்கு வெள்ளிக்கிழமை... கார்த்தாலயே ராகுகாலம் போயிடுத்து... அதனால சாயங்காலம் நாலு மணிக்குப் பொண் பார்க்க வரச் சொன்னேன்...''

**வீ**டே அடுத்த அரைமணியில் களை கட்டியது. மணி மூன்றடிக்கும்போதே வாசலில் வந்த காரைக் கண்டு திடுக்கிட்டனர்.

''ஹாய்... பின்னால பாரு...''

''ஆமாக்கா... ஜம்முனு தான் இருக்கார் பிள்ளை... பரவாயில்லே அப்பா கண்ணைத் திறந்து தான் பார்த்து இருக்கார்.... சரி நீ சட்டுனு தயாரா இரு...''

ரகுவைப் பார்த்த மாத்திரத்திலேயே அருணாவின் மனத்தில் பட்டாம் பூச்சி பறக்க ஆரம்பித்தது. தன் மனத்தின் வக்கிரத்தை அறிவால் அடக்கினாள். கள்ளம் புகுந்த அகத்தின் அழகு முகத்தில் தெரிந்தது.

''ஏண்டி அருணா... இப்படிச் சோர்ந்து போயிட்டே... இந்து கல்யாணம் பண்ணிண்டு போகப் போறாளேன்னு வருத்தமா... எல்லாம் கொஞ்ச நாள்தான்... அப்புறம் தானே சரியாயிடும்... உனக்குனு ஒருத்தன் வந்துட்டா... எங்க எல்லாரையும் மறந்துடப் போறே!''

இந்து. ரகுவின் கல்யாணம் விமரிசையாக முடிந்தது. அருணாவின் உள்ளத்தில் கனமையாய் ஒருவலி. காரணம் சொல்ல முடியாத குழப்பம் ஏற்பட்டது!

**போ**லியாகச் சிரித்தபடி இந்துவை நெருங்கி... ''என்னக்கா இது... ரெண்டு மாசத்திலே என்னமோ புதுசாத் தெரியறே... உடம்பு பூரா ரோஜா இதழை ஒட்டிண்டா போல் ஒரு கலர்... ஹை... இந்தப் புடவை கூட ஜோரா இருக்கே... 'விமலா' இது... யாரோட செலக்ஷன்... கண்டிப்பா உன்னுதா இருக்காது...''

''டீ... அருணா அவளைப் போட்டு அப்படி உலுக்காதேடீ...''

''அம்மாவைப் பாரு... அக்கா இப்போ உசத்தியா ஆயிட்டா... நான் தொட்டால் தேஞ்சுப் போயிடுவாளா?''

''அவ குளிக்காம இருக்காடீ... சட்டுனு டிரஸ் மாத்திண்டு நீயும் கிளம்பு... அப்பா வீட்டிலே இருக்கட்டும்... நாங்களே உனக்காகத்தான் காத்துண்டு இருந்தோம்... மூணு பேரா முதல் முதல்ல டாக்டர்கிட்ட போக வேண்டாம்... நீயும் வந்தா நாலு பேராகப் போலாம்னு... சட்டுனு கிளம்பு!''

எங்கோ ஒரு நூலிழை அறுந்தது போல் இருந்தது!

**மா**தங்கள் லேசாக உருண்டன. இந்துவிற்கு அழகான ஆண் குழந்தை பிறந்தது. பிறந்த அன்றிலிருந்தே அவனுக்குப் பெயர் சூட்ட, ஏகப்பட்ட விவாதம். அப்படியே ரகுவை உரித்து வைத்துப் பிறந்ததனாலேயோ என்னவோ அருணாவிற்குக் குழந்தை மேல் ஆசை அதிகமாயிற்று.

''போம்மா... அக்கா! நீ இந்த அம்மா, அப்பா பேச்சைக் கேக்காதே.... குழந்தைக்கு கோபால்னு பேர் வைக்கணுமாம்... தாத்தா பேராம்... என்னென்னவோ சொல்றா... வீட்டுக்குப் பத்து ராமன். கோபாலன் திரும்பித் திரும்பி வெச்ச பேரையே வெச்சண்டு... நான் சொல்றேன். 'ஸ்லீகார்'னு வெக்கணும்... சரியாக்கா... உனக்குப் பிடிக்க இருக்கா...''

''உனக்குப் பிடிச்சா எனக்கும் பிடிக்கும் அருணா... உன் இஷ்டம் போல வெக்கலாம்...''

ஆனால் திடீரென்று மூன்றும் நாள் ஏற்பட்ட குழப்பத்தில், உடலில் லேசாகக் கண்ட ஜுரம், நான்காம் நாள் ஏகமாக ஏறி, ஐந்தாம் நாள் நிரந்தரமாய்ப் போய் விட்டாள் இந்து.

தேற்ற முடியாமல் துவண்ட ரகுவை ஆதரவுடன் கவனித்துக் கொண்டாள் அருணா...

வார்த்தைக்கு வார்த்தை அவன் அருணாவில் இந்துவைக் கண்டுகொண்டு பேசிய போது புரியவில்லை அவளுக்கு. ஸ்லீகாரைத் தானே பார்த்துக் கொண்டாள் அம்மா. பரீட்சை முடிந்ததும்.

அம்மாவிடம் லேசாகத் தன் எண்ணத்தைக் கோடிட்டுக் காட்டினாள் அருணா...

''என்னடி சொல்றே... ரகுவை, நீயே இஷ்டப்பட்டுப் பண்ணிக்கறேன்றயா?.... நன்னா யோசி... ஆனா எங்களுக்கே அப்படி ஒரு எண்ணம் இருந்தது... தங்கக் கம்பியான அந்தப் பிள்ளை பாவி. இந்துதான் அல்பாயுசில போயிட்டா.... குழந்தைய எத்தனை நாள் நாம வெச்சிக்க முடியும்... ரகுவுக்குச் சின்ன வயசு... வேற ஒருத்திய பண்ணிண்டு.

டைப்பிஸ்ட்: ஒரு நாள்தான் சார் லீவு கேட்கிறேன். 'ஆபீஸ் வேலையெல்லாம் நின்று போகும், லீவு தரமாட்டேன்' என்கிறீர்களே?

மானேஜர்: நீ லீவு போட்டால் உன் செக்ஷனில் உள்ள எல்லா ஆண்களுமே லீவு போட்டு விடுகிறார்களே.

—அரியநாச்சி ரத்னவேலு.



குழந்தையைக் கஷ்டப்படுத்தினு... நாங்களே உன்னைக் கேக்கனும்னு நினைச்சோம். ஆனு நீ என்ன நினைச்சிப்பியோன்னு கேக்கலே... இருந்தாலும் இன்னும் யோசி... சாயங் காலம் அப்பாவை மாப்பிள்ளைகிட்ட பேசச் சொல்றேன்...''

''நான் கல்யாணம் பண்ணிக்கறதுன்னு ரகுவைத் தான் பண்ணிப்பேன்...''

அப்பாவின் வாயால் விஷயத்தைக்கேட்ட ரகு, முதலில் கல்யாணத்துக்கே மறுப்புச் சொல்லி, பெரியவர்கள் மீண்டும் மீண்டும் ஸ்வீகாரை இடையில் வைத்துப் பேசிப்பேசி, அவனை மாற்றி, கடைசியில் திருமணத்திற்கு ஒப்புதல் அளித்தான். இருந்தும் ஒருநாள்,

''அருணு... எனக்காகவோ, ஸ்வீகாருக் காகவோ பச்சாதாபப்பட்டு இந்த முடிவை நீ எடுக்கலையே...'' என்று பலமுறை கேட் டான். எதைப் பற்றியும் யோசிக்காமல் ரகுவின் கவர்ச்சியில் மயங்கி, தன் மனம் போல் வாழ்வு அமையப் போவதில் நிறை வுற்றிருந்தாள்.

கல்யாணம் திருப்பதியில் என முடிவா யிற்று. கல்யாணத்திற்கு இரண்டு நாள் இருக்கும்போது அருணுவின் கனவில் இந்து வந்து அழகாய்ச் சிரித்து —

''அருணு... உன் மனசு தெரிஞ்சுதான் நான் விட்டுக் கொடுத்துட்டேன்.... புரி யுதா?...'' என்றாள்.

''இதுக்கு என்ன அர்த்தம்?'' திடுக்கிட் டாள் அருணு. ஒருவேளை தன்னுடைய வக்ரமான எண்ணம் தான் இந்துவின் உயிரைக் குடித்து விட்டதோ...

திடீரென்று மனம் குழம்பி விட்டது. எல்லோர் மீதிலும் ஆத்திரமாக வந்தது. தினமும் ஆபீஸ் போகு முன் வந்து ஸ்வீ காரைப் பார்த்து விட்டுப் போவான் ரகு.

அன்றும் வழக்கம்போல் வந்து பார்த்து விட்டு, அருணுவை நோக்கி இதமாய் முறு வலித்தான். அருணுவிற்கு அவன் முறுவல் தீயாய்ச் சுட்டது.

ரகு தன்னை அணைப்பது போல் கற்பனை செய்து பார்த்தாள். ரகுவின் முகம் இன்ப மாகவும், தூரத்தில் இந்துவின் முகம் ஏக்க மாகவும் தன் முகம் குழம்பியும் தெரிந்தது அவளுக்கு.

''முடியாது... கட்டாயம் முடியாது.... இந்தக் கல்யாணம் நடக்கவே கூடாது... நான் தப்புப் பண்ணிட்டேன்... இந்த 'ஆங்கிள்' யோசிக்கவே மறந்துட்டேன்.... அக்கா... என்னை மன்னிச்சுடு... ஸ்வீகாரை நான் கட்டாயம் பொறுப்பா கவனிச்சுக் கறேன்... ஆனு இந்தக் கல்யாணத்தை என்ன காரணம் சொல்லி நிறுத்தறது... அதுதான் புரியலேயே...''

அவள் மனம் குழம்பியபடியே இருக்கத் திருமணம் நடந்தேறியது.

வீட்டிற்கு வந்தவுடன் இந்துவின் படத் திற்கு முன் நின்று குலுங்கிக் குலுங்கி அழு தாள் அருணு.

''அக்கா... நான் உனக்குத் துரோகம் பண்ணிட்டேன்... சின்ன வயசிலேயிருந்து பெரியவளு சொல்லிண்டு எல்லாத்தையும், நான் ஆசைப்பட்ட எல்லாத்தையும்,



அவர்: மனைவிக்கு நகைபோட வக்கில் லாத பிச்சைக்காரப் பயல்னு என்னைத் திட்டிட்டான்...

இவர்: யாருடா அது...?

அவர்: ராத்திரி எங்க வீட்டுக்கு வந்த திருடன்...

—முத்துக்குமார்.

விட்டுக் குடுத்தே. நான் சின்னவள் என்ற சலுகைல வாங்கிண்டேன்... இப்போ நான் ஆசைப்பட்டேன்றதுக்காக உன் கணவனைக் கூட எனக்காக விட்டுக் குடுத்துட்டியாக்கா. நீதான் அவர்மேல் உசிரா இருந்தே... ஆனு அவர் உன்னை மறந்துட்டு என்னைக் கல் யாணம் பண்ணிண்டுட்டார்... அவர் உன் கணவர் தானக்கா... எனக்கு வேண்டாம்...'' மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள் அருணு.

''அருணு... என்னது இது...'' இதமாய் அழைத்தவனை எரிப்பது போல் பார்த்தாள் அருணு.

''எது என்னது... இந்தப் படத்தில் இருக்கறதையா கேக்கறீங்க... நீங்க மறந் துட்டாலும்... நான் மறக்கலே... என் அக்காவை இவ்வளவு சீக்கிரம் எப்படி மறந்து போனீங்க...? நாளைக்கு நான் செத்துப் போயிட்டா... இன்னொருத்தியைத் தேடிப் போயிடுவீங்களா?''

''நீ ஏன் இந்தக் கல்யாணத்துக்கு ஒத்துண்டே?''

''நீங்க ஏன் ஒத்துக்கிட்டீங்க...?''

''இந்துவோட தங்கைன்றதுக்காக ஒத் துண்டேன்...''

''நான் அவசரப்பட்டுட்டேன்... என் னோட பிரேமையே பெரிசா இருந்தது.... பகல் கனவிலேயே காலத்தை ஓட்டிட் டேன்... இந்து கனவுல வந்தாவிட்டுத்தான் உலகமே புரிஞ்சுது... அதுக்குள்ள ரொம்ப நேரமாயிடுத்து...''

''பரவாயில்லே அருணு... உங்கம்மா, அப்பாவுக்காக, ஸ்வீகாருக்காக நீ இங்கேயே இரு... ஆனு நீயா விரும்பற வரை நாம நெருங்கி வாழ வேண்டாம்... சரியா...? ஆனு அருணு! உன்னில் என் இந்துவையும் பார்த்தேன்... மனைவி வேணும்னு இருந் திருந்தால் எத்தனையோ பெண்கள் இருக் காங்க... புரியுதா?...''

லேசாகப் புரிய ஆரம்பித்தது அருணு வுக்கு. போகப்போக மேலும் புரியும்.

ஸுப்ரீம். நீராடும் வேளையிலே நிறைவழகு பேணிடும்.




ஸுப்ரீம் குளியல்...முகம் மட்டுமல்ல, மேனி முழுவதும் அழகில் குளித்தெழும். ஏனெனில், செழுமையான பியூட்டி க்ரீம் கொண்டது ஸுப்ரீம்—செறிவான நுரைமூலமே அதனை உணர்ந்திடுவீர். ஸுப்ரீம். மென்மையுடன் நின்றுநிலவும் நறுமணம்...குளித்தபின் வெகுநேரம் வீசும் நல்ல வாசம்.



ஸுப்ரீம்—பியூட்டி க்ரீம் சோப்

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HTB-HLL 8485





# வேற்று மொழி வளர்த்த நட்புறவு

வாஸந்தி

14

வெஸ்ட் மினிஸ்டர் ஆபியின் சரித்திரம் பதினொன்றாம் நூற்றாண்டில் துவங்குகிறது. அன்றிலிருந்து இன்று வரை பிரிட்டிஷ் அரசர்களும் அரசிகளும் இங்கு வந்துதான் முடிசூட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களது கல்லறைகளும் இங்கேதான் அமைந்துள்ளன. இங்கிலாந்தின் எல்லாப் பிரபலஸ்தர்களின் கல்லறைகளும் இங்குதான்.

ஆரம்ப ஆங்கிலேய 'கோத்திக் கட்டிடக்கலை'யின் மிகச் சிறந்த உதாரணமான இந்தக் கட்டிடத்தின் அற்புத அழகை வியந்தபடி உள்ளே நுழைந்தேன்.

பிரபல கல்லறைகள் ஆபியின் பின்பக்கம் திறந்த வெளியில் இருக்கும் என்று நான் கற்பனை செய்திருந்தேன்.

''நீங்கள், ஐஸாக் நியூட்டனை மிதித்துக் கொண்டு நிற்கிறீர்கள், டியர் லேடி!'' என்று கைட் சொன்னதும் தூக்கி வாரிப் போட்டுப் பின்னுக்கு நகர்ந்தேன்.

நியூட்டனின் பெயர் பொறித்த பெரிய சலவைப் பலகையின் மேல் நின்றிருந்தேன்!

அதே இடத்தில் தான் அவர் புதைக்கப்பட்டிருப்பதாக கைடு சொன்னபோது ஏதோ அபசாரம் செய்தாற்போல் எனக்குப் பதைத்துப் போயிற்று. ஆனால் என்னுடைய இந்த உணர்ச்சி பைத்தியக்காரத்தனமானது என்று தோன்றிற்று. அடுத்தடுத்து தரை முழுவதும், அந்த விஸ்தாரமான கூடம் முழுவதும் மிகப் பிரபலமானவர்களின் பெயர்களைத் தாங்கிய சலவைப் பலகைகள் — 'ஆங்கில இலக்கியத்தின் தந்தை' என்று அழைக்கப்படும் 'சாஸர்'ரிலிருந்து சர்ச்சில் வரை... பிரபல இலக்கிய கர்த்தாக்கள், கவிஞர்கள், நாவலாசிரியர்கள், சிற்பிகள், விஞ்ஞானிகள், அரசியல்வாதிகள்... ஒரு அடி எடுத்து வைத்தால் மில்டன் —அடுத்த அடியில் டாக்டர் ஜான்ஸன்... முன்னால் சென்றால் டைலன் தாமஸ்... 'அமெரிக்காவில் குடியேறியிருக்கும் ஆங்கிலேயர்கள் தன்னிச்சையுடன் இருக்க முடியாது' என்று கோபத்துடன் கையை வீசிப்பேசும் வில்லியம் பிட்டின் சிலைக் கடியில் அவரது கல்லறை. எங்கு திரும்பினாலும் காலை வைத்தாலும் வாழ்வில் எந்த வகையிலாவது பெரிய சாதனை புரிந்திருக்கும் மகா புருஷர்கள். அந்த மேதைக் கும்பலுக்கு முன் சத்யமாய் நான் கரைந்து போனேன். அனந்த கோடி ஜனங்களுள் ஒரு சிறுபுள்ளியாய், கண்ணுக்குப் புலப்படாத தூசாய், உருவமும் அருவமும் இழந்து நின்றேன். என்னுள் ஏற்பட்ட இந்த நெகிழ்ச்சி நான் என்றும் பாதுகாக்கப் போகிற ஓர் அந்தரங்கமான அனுபவம்.



✕ டவர் பாலம்

பாரீஸில் ஆனுடன் சுற்றும்போது ஆங்கில இலக்கியத்தில் எனக்கு ஆழ்ந்த பற்றுதல் இருப்பதை அறிந்ததும் அவர் ஆச்சரியப்பட்டார்.

''இருநூறு ஆண்டுகள் ஆங்கிலேயர்கள் உங்களை ஆண்டு சூறையாடியிருக்கிறார்கள்! அவர்களுடைய மொழி மீது உங்களுக்கு எப்படி இப்படி மோகம் இன்னும் இருக்கிறது?'' என்றார்.

''அவர்களது மொழி என்ன தவறு செய்தது?'' என்றேன் நான். ''ரஸனையுள்ள மனசு இந்த வேறுபாடுகளைப் பார்க்காது. ஆங்கில இலக்கியத்தை ரஸிப்பதால்

நான் தமிழிலக்கியத்தை அலட்சியப்படுத்துவதில்லையே? எழுதுவது கூட என் தாய் பாஷையில் நான் எழுதுகிறேன்.''

''என்றால் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்றார் ஆன்.

''இங்கிலாந்துக்கும் ஃப்ரான்ஸுக்கும் பல தலைமுறைகளாகப் பகை உண்டு. இரண்டு தேசங்களுக்கு இடையே 20 மைல் நீர்ப் பரப்பே இடைவெளி இருந்தாலும், ஃப்ரெஞ்சுக்காரர்கள் வேண்டுமென்றே ஆங்கிலம் கற்க மாட்டார்கள். பேச மாட்டார்கள். நான் பல பாஷைகளைக் கற்றிருக்கிறேன். ருஷ்ய மொழி கூட சரளமாகப் பேசுவேன். ஆனால், சிறிய வயதில் இரண்டாம் உலக யுத்தத்தின் போது ஜெர்மன்காரர்கள் ஃப்ரான்ஸை ஆக்ரமித்திருந்த நினைவில் என்னால் பிறகு அவர்களது மொழியைக் கற்க முடியவில்லை. I just cannot learn their language என்றார்.''

பகைவனது பாஷையைக் கற்று அதனையே அவனை விரட்டும் ஆயுதமாகப் பயன்படுத்தினோம்' என்று சொன்னேன். ''வாஸ்தவத்தில் ஆங்கிலேயர்கள் விலகிய போது சிநேகிதத்துடனேயே விலகினார்கள்.''

''உங்களுக்கெல்லாம் அவர்கள் மீது கோபமில்லாததும் துவேஷமில்லாததும் ஆச்சரியமாயிருக்கிறது'' என்றார் ஆன் மறுபடி.

''அவர்களது பாஷை தான் பாலமாக அமைந்தது. அவர்களது இலக்கியமும் அதன் அறிவு எங்களுக்குத் திறந்த வாசல்களும் ஜன்னல்களுமே இப்பொழுது இருக்கும் நல்லுறவுக்கு அஸ்திவாரமாக அமைந்தது ஆன். அவர்களது பாஷையை நாங்கள் கற்றிருக்காவிட்டால் நிரந்தர விரோதிகளாகியிருப்போம்!''

அந்த க்ஷணத்தில் மனசுக்குத் தோன்றிய விளக்கத்தை ஆனிடம் தெரிவித்த பிறகு நான் யோசனையில் ஆழ்ந்தேன். இப்பொழுது மாநிலத்துக்கு மாநிலம் வேற்றுமைகள் பரவுவதும், பூமிப்புத்திரர்கள் என்கிற கூக்குரல் எழுவதும் ஒருத்தரைப்பற்றி இன்னொருத்தர் சரியாகத் தெரிந்து கொள்ளாததாலா? தமிழனின் கலாச்சாரத்தை பஞ்சாபிகளும், பஞ்சாபின் முன்னேற்றத்தை அஸ்ஸாமியும், அஸ்ஸாமின் பிரச்னைகளை உ. பி. காரனும் உணர்ந்து ரசிக்கத் தெரிந்தால் நமது தேசம் உருப்படியாக இருக்காதா?'' அறிவீனம்' என்கிற சுவர் அல்லவா துவேஷத்தை எழுப்புகிறது?

ஆங்கிலேய சீதோஷ்ணநிலை முற்றிலும் கணிக்க முடியாத ஒன்று என்பார்கள். வெய்யில் சுளீரென்று அடித்தாலும் விவேகமுள்ள ஆங்கிலேயன் மழையை எதிர் நோக்கிக் குடையுடன்தான் வெளியில் செல்வானாம்.

நாங்கள் கிளம்பியதிலிருந்து மதிய உணவு நேரம் வரை வானம் தெளிவாக இருந்தது. பிற்பகல் டவர் ஆஃப் லண்டன் போக வேண்டியிருந்தது. வானம் திடீரென்று இருண்டு நல்ல மழை பிடித்துக் கொண்டது. சிலர் புத்திசாலித்தனமாகக் குடை கொண்டு வந்திருந்தார்கள். நான் இரண்டு புத்திசாலிகளைச் சிநேகிதம் செய்து கொண்டு மாற்றி மாற்றி அவர்களுடன் குடையைப் பகிர்ந்து கொண்டு டவரைச் சுற்றினேன்.

இந்த டவரில் ஒருகாலத்தில் கைதிகளை எத்தனை பயங்கரமாகத் துன்புறுத்தினார்கள் என்கிற விவரங்களைக் கேட்கவே பயங்கரமாக இருந்தது. ஏற்கெனவே நடுக்கிய குளிர் இப்பொழுது எலும்பைத் துளைத்தது.

✕ லண்டன் டவர்



✕ லண்டன் டவர் காவலர்கள்



இங்குதான் ஒரு கட்டிடத்தில் பலத்த பாதுகாப்புடன் அரச குலத்து விலையுயர்ந்த நகைகளையும் மகுடங்களையும் வைத்திருக்கிறார்கள். நமது பிரசித்தி பெற்ற கோஹினூர் வைரமும் இங்குதான் இருக்கிறது: நமது பொக்கிஷம் இங்கிருக்கிறதே என்று எனக்குத் தோன்றாமல் இல்லை. 'எல்ஜின் மார்பிள்ஸ் என்று இப்பொழுது சொல்லப்படும் கிரேக்கச் சலவைச் சிற்பங்களை பிரிட்டிஷ் மியூஸியத்தில் சிறைப் படுத்த பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எந்த அதிகாரமுமில்லை. அது எங்களுக்குத் திருப்பப்பட வேண்டும்' என்று சிறிய நாடான கிரீஸ் வாதாடிக் கொண்டிருக்கிறது. சூறையாடப்பட்டும் சொரணை இல்லாதவர்கள்தான் நாம் என்று நினைத்துக் கொண்டேன்.

ஆங்கிலேயர்களுக்கு மூட நம்பிக்கைகளும் நிறைய உண்டு என்று இங்கு கைடு சொன்ன ஒரு கதையில் தெரிந்தது. டவரில் தொன்றுதொட்டு சில காக்காய்கள் வசிக்கின்றனவாம். காக்காய்கள் மடிந்தோ பறந்தோ போய் விட்டால் முடியாட்சி விழுந்துவிடும் என்ற நம்பிக்கையினால் காக்காய்கள் குறையக் குறைய புதிய காக்காய்களைக் கொண்டு வந்து கூட்டி வைக்கிறார்களாம்! மழையில் நடந்து நடந்து நான் போட்டிருந்த ஷூவும்ஸாக்ஸும் நன்றாக நனைந்து கால் விரல்கள் விறைத்துப் போயின. லண்டன் டூரை முடித்த கையுடன் மாலை ஆறரை மணிக்குத் துவங்கும் ஒரு நாடகத்துக்குப் போக டிக்கெட் வாங்கும்படி திரு. பட்டப்பாவிடம் சொல்லியிருந்தேன்.

லண்டனில் இருக்கும் பொதுக் கழிவறைகளில் கைகளை உலர்த்திக்கொள்ளக் கைத்துண்டிற்குப் பதிலாக சூடான ஆவிக் காற்றடிக்கும் hand drier இருக்கும். அதன் பட்டனை அமுக்கினால் சற்று நேரத்துக்கு சூடான காற்றடிக்கும். அதற்கடியில் அரைமணிப் போது எனது கால் ஜோடுகளையும் உறைகளையும் காய வைத்தேன்! திரு. பட்டப்பா வந்ததும் அவரும் நானும் Children of the lesser Gods என்ற முதல்தரமான நாடகத்தைப் பார்த்தோம்.

முக ஒப்பனையும் காட்சி ஜோடனையும் இல்லாமல் இரண்டு மூன்று பெஞ்சுகளை வைத்துக் கொண்டு நாடகம் நடந்தது மிக புத்திசாலித்தனமாக இருந்தது. பல மாதங்களாக அந்த நாடகம் ஓடுகிறது. வருஷக் கணக்கில் ஓடும் நாடகங்களும் அங்கு உண்டு. அகாத்தா கிருஸ்தியின் The Mouse Trap முப்பத்தாறு வருஷங்களாக தினமும் நடக்கிறதாம்! அப்படித் தொடர்ந்துநடக்க அதில் என்னதான் விசேஷம் இருக்கும் என்கிற ஆர்வத்தில் மறுநாளைக்கு மறுநாள் பார்க்க அதற்கும் டிக்கெட்டுக்கு ஏற்பாடு செய்தேன்.

மறுநாளைக்கு லண்டன் பாரதிய வித்யா பவனில் என்னுடைய சொற்பொழிவு நிகழ்ச்சிக்கு ஏற்பாடாகியிருந்தது. நான் லண்டனுக்குவந்திருப்பதை அறிந்து லண்டன் பி. பி. ஸி. தமிழ் பிரிவை நடத்தும் திருசங்கரமூர்த்தி என்னுடன் தொடர்பு கொண்டு, பி. பி. ஸி. யில் ஒரு பேட்டிக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

அதனால் மறுநாள்காலை பட்டப்பாவின் அலுவலகத்தில் வேலை பார்க்கும் மிஸஸ் பட்டேலுடன் லண்டனின் மிகப்புகழ்பெற்ற கடைத் தெருவான ஆக்ஸ்வர்ட் ஸ்ட்ரீட்டுக்குச்சென்று டில்லி குளிருக்கு அவசியமான கம்பளி ஸ்வெட்டர்களை வாங்கினேன். பட்டிக்காட்டான் பட்டிணத்திற்கு வந்தாற்போல் ஆக்ஸ்வர்ட் ஸ்ட்ரீட்டின் அழகிய கடைகளைக் கண்டு திகைத்துப் போனேன். நாம் தேவலோகத்தைப் பார்த்ததில்லை! அது இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தோன்றிற்று.

பி. பி. ஸி. இருக்கும் 'புஷ் ஹவுஸ்' ஸுக்குப் பிற்பகல் இரண்டு மணிக்குப் போக வேண்டியிருந்ததால் அந்தக் கனவுலகத்திலிருந்து அவசரமாகக் கிளம்ப வேண்டியிருந்தது.

பி. பி. ஸி. யில் சங்கரமூர்த்தியும் அவரது உதவியாளர் ஆனந்தியும் மிகப் பிரியத்துடன் என்னை வரவேற்று உபசரித்தார்கள். ஆனந்தி இலங்கைத் தமிழர்.



# அடுக்கடுக்காய் அறிவுரைகள்

● நாம் நல்லவர்களாக இருந்தால் மட்டும் போதாது. பிறர்க்குப்பயன் படுகிறவர்களாகவும் வாழ வேண்டும். பரோபகாரியாக வாழாதவன் பூமிக்குப் பாரம்தான்—
என்று எச்சரித்து:

● தினந்தோறும் ஆழமான புத்தகம் ஒன்றில் அரைமணி நேரமாவது மூழ்கி எழுவது நம்மை மனிதனாக்கும். ஆகவே கட்டாயம் படிப்போம்—
என்று உபதேசம் செய்து:

● மந்திரத்தோடு 13 சூர்ய நமஸ்காரங்கள், கொஞ்சம் சிரசாஸனம்— இவற்றைத் தினந்தோறும் செய்து வந்தால் உடலை வலிவுடன் காப்பாற்றலாம்—
என்று யோசனை கூறி:

● ஒருபுறம் இந்தநாட்டை விழுங்குவதற்காகத் திட்டமிடும் எதிரி நாடுகள்: மறுபுறம் நாட்டுக்குள்ளே குழப்பமூட்டும் சக்திகள்: ஹிந்து சக்தியை எதிரியாக நினைத்து அதனை ஒழிக்க முயலும் அரசு —
என்று அரசின் தலையில் நறுக்கக் குட்டி:

● உன்னையே விமர்சித்துக் கொள். ஆனால் சுயஇகழ்ச்சி கூடாது—
என்று அறிவுறுத்தி:

● பிரபலஸ்தர்கள் வாழ்வின் சுவையான நிகழ்ச்சிகளை அவ்வப்போது எடுத்துக் கூறி, குருஜி கோல்வால்கரையும், காஞ்சி பெரியவரையும் அடிக்கடி மேற்கோள் காட்டுகிறது **இராம. கோபாலனின் மாணவருக்கு** ஞானவிளக்கு. இந்நூல் நமக்குத் தெரிந்த பல விஷயங்களையே ஞாபகப்படுத்தும் ஒரு குறிப்பேடு. பொறுமையில்லாத இன்றைய மாணவர் சமுதாயத்துக்கு அறிவுரைகளை எக்கச்சக்கமாய் அடுக்கிக் கொண்டே போனால் எதிர்பார்க்கும் பலன் கிட்டுமோ?

மாணவருக்கு ஞானவிளக்கு




வெளியிட்டோர்:
எச். வைத்தியநாதன்,
36, சுந்தரமூர்த்தி விநாயகர் கோவில் தெரு, சென்னை—5.
விலை: ரூ.10.

—எஸ்லார்

மிகத் துடிப்பானவர். இலங்கை வாழ் தமிழர்களுக்காக ஆத்மார்த்தமாக அவர் படும் ஆதங்கம் பேச்சில் தெரிந்தது.

நான் பயணக்கட்டுரை எழுதுவதைப் பற்றிச்சொன்னதும், ஆனந்தி படபடத்தார்.

''ஒவ்வொரு இடத்திலும் இரண்டு மூன்று நாட்களே தங்கியதில் இந்த இடத்தைப் பற்றி என்ன தெரிந்து கொண்டு விட முடியும் நீங்கள்? ஒரு இடத்தைப் பற்றி எழுத வேண்டுமானால் பல மாதங்கள் தங்கி விஷயத்தை நன்றாகத் தெரிந்து கொண்டு தான் எழுதவேண்டும்'' என்றார்.

''பிறகு அது ஸ்தல புராணமாகப் போய்விடும். பயணக் கட்டுரையாகஇருக்காது'' என்று நான் சிரித்தேன்.

''லண்டனைப் பற்றியும் பாரிஸ்ஸைப் பற்றியும் நான் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதப் போவதில்லை. என்னுடைய கண்களுக்குப் பட்டதையும் எனது அறியாமையால் நேர்ந்த அனுபவங்களையும் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளப் போகிறேன். மேலெழுந்தவாரியான அவசரப்பார்வைதான் என்னுடையது, ஒப்புக் கொள்கிறேன்'' என்றேன்.

ஆனந்தி பிறகு மிகப் பிரியமாகப் பேசினார். லண்டன் அமெரிக்க நாடுகளுக்கெல்லாம் தனியாகப் பயணித்ததைச் சொன்னார். மிக சுவாரஸ்யமான தீரமான பெண்மணி. அவர் தான் என்னைப் பேட்டியும் கண்டார்.

ஹிந்தி பிரிவைச் சேர்ந்தவர்களுடன் நான் உரையாடிக் கொண்டிருந்தேன். நான் ஹிந்தியில் பேசுவதைக் கண்டு, ''நீங்கள் வருவதைப் பற்றி எங்களுக்குச் சற்று முன்னதாகத் தெரிவித்திருந்தால் எங்கள் ப்ரோக்ராமில் உங்களை ஹிந்தியில் பேட்டி கண்டிருப்போம்'' என்றார்கள்.

அவர்கள் காட்டிய பிரியத்துக்கு நான் நன்றி சொல்லிவிட்டுத் திரு. பட்டப்பாவின் அலுவலகத்துக்குத் திரும்பி அவருடன் பாரதிய வித்யா பவனுக்குச் சென்றேன்.

திரு. மத்தூர் கிருஷ்ணமூர்த்தி பவனின் வாயிலில் காத்திருந்து வரவேற்றார். இருபது வருஷங்களுக்குமுன் நான் பெங்களூரில் சந்தித்த மாதிரியே இப்பவும் இருந்தார். அதே கன்னடவாடை வீசும் தமிழ்ப்பேச்சு. வாய் நிறையப் புன்னகை. இன்னும் அதிகமாக வெளுத்திருந்த முகம்.

தமிழைச் சரளமாகப் புரிந்து கொள்ளும் அரங்கம் அது இல்லை என்ற காரணத்தால் நான் ஆங்கிலத்தில் கம்பராமாயணத்தைப் பற்றிப் பேசினேன்.

சற்று நேரம் வந்திருந்தவர்களுடன் பேசிவிட்டுவீட்டிற்குத் திரும்புவதற்குள் பத்து மணி ஆகிவிட்டது. மறுநாள் மறுபடி ஒரு மறக்க முடியாத பயணம் ஷேக்ஸ்பியர் பிறந்த ஊருக்கு!

(தொடரும்)

''என்னங்க, புடவை வாங்கித் தறேன்னு சொன்னீங்களே! எப்போ வாங்கித் தரீங்க?''



''இன்னைக்கே வாங்கித் தர்றேன்? பட்டுப் புடவையா அல்லது சில்கா?''
''பட்டுப்புடவை.''



''சரி, காஞ்சிவரமா அல்லது தர்மா வரமா?''
''உங்க இஷ்டம்.''



''பெரிய பார்டரா அல்லது சின்ன பார்டரா?''



''போதும்டா சாமி! முன்னே நீங்க கிளம்புங்க. வழியிலே பேசிக்க லாம்!''



''எங்கே கிளம்பறது? காஞ்சிவரமா, தர்மா வரமா?''



''புடவையில்லேன்னு போகுது உங்க கேள்விகளுக்குப் பதில் சொல்றதைவிட விஷம் சாப்பிட்டு உயிரை விடலாம்!''



''எந்த விஷம்? சயனைடா அல்லது என்டிரினு?''



## சிரிப்பதற்கு

''உன்னைப் பிடிக்கக் கொடுத்து ஆயிரம் ரூபாய் வாங்கி என்ன பிரயோஜனம்? இதை விட ஒரு அரசியல்வாதியைக் கட்சி மாற வெச்சா ஒரு லட்சமோ ரெண்டுலட்சமோ கிடைக்குமே!''

அ.குமார்





# சிலசிரிப்படங்கள்



"நீங்களும் இருக்கீங்களே, என் புருஷனைக் கடத்திக்கிட்டுப் போயிட் டாங்கன்னு, என் புருஷனை அஞ்சு லட்சம் கொடுத்துக் கட்சி மாத்திட் டாங்கன்னு நாலு பேருகிட்டே மதிப்பா சொல்ற மாதிரி ஏதாவது செஞ்சிருக்கீங்களா?"

அ. குமார்



















## 5

வார்த்தைகள் காதில் விழாவிடினும், எத்திராஜ், இன்ஸ்பெக்டரிடம் ராஜாவுக்கு எதிராக ஏதோ சொல்கிறான் என்பது மட்டும் விஜிக்கு நன்றாகப் புரிகிறது.

அவன், அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

என்னவோ தெரியவில்லை. இந்த எத்திராஜ், இவர்கள் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தது முதலே — விஜிக்கு இவனைக் கண்டால் பிடிப்பதில்லை...

விஜிக்கென்று சில தனி சிறப்புக் குணங்கள் உண்டு... வீட்டுக்கு வேலைக்காக வருபவர்கள் யாராக இருந்தாலும், அவர்களை எடுத்த எடுப்பில் நேர் பார்வையாக, அந்தரங்கத்தைத் துளைக்கும்படியாகப் பார்ப்பாள்.

இவளது பார்வையை நேருக்கு நேர் சந்திப்பவர்கள் மட்டுமே — இவளால் அங்கீகரிக்கப்படுவார்கள். மாறாக, இந்த விழிகளைச் சந்திக்க முடியாமல் தலை குனிபவர்களை, வேலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டாம் என்று வற்புறுத்தும் வகையில்




ஸ்லேட்டில் × குறி போட்டுப் பரந்தாமனிடம் நீட்டி விடுவாள்.

''அடேடே... ஏம்மா...''

அவரது விசாரிப்புக்கு எந்த விதப்பதிலும் அவளிடமிருந்து வராது... மெல்லிய முறுவல்தான் பதில்.

எத்திராஜ் வேலையில் சேர்ந்ததுமே, அவள் தனது ஆட்சேபணையைச் ஸ்லேட்டு மூலமாக மாமாவிடம் தெரிவிக்காமலில்லை... ஆனால், இவன் விஷயத்தில் மாத்திரம், பரந்தாமன் விஜியின் அபிப்பிராயத்தை மதிக்கவில்லை...

''பாவம்மா... ரொம்பக் கஷ்டப்பட்டவன். என்னை ஒரு பெரிய ஆபத்திலேயிருந்து காப்பாத்தினவன். கடத்தல் கேஸ் விஷயமா, எலியட்ஸ் 'பீச்'லே நாங்க, குற்றவாளிங்களைப் பிடிக்கக் கண்ணி வச்சிருந்தோம்... பத்து நாள் முயற்சியில எதுவும் வெற்றி கிடைக்கலே... பதினோராவது நாள், நானும் இன்னொரு போலீஸ் ஆபீஸருமா 'பீச்'சை ஒரு ரவுண்டு அடிச்சிட்டு, ஜீப்லே ஏறப் போன சமயத்துல இவன் எங்கேயிருந்தோ ஓடி வந்து எங்களைத் தடுத்தான். நாங்க கூட, இவனே கடத்தல்காரனா இருப்பானோன்னு ஒரு கணம் சந்தேகப்பட்டோம். ஆனா, அடுத்த நிமிஷமே, எங்க ஜீப் பெரிய சத்தத்தோட வெடிச்சு, தூள் தூளானப் பத்தான் உண்மையே புரிஞ்சது...''

''....''

''இவன் மட்டும் அன்னிக்கு எங்களைத் தடுக்காம இருந்திருந்தா — உங்க மாமியோட பூவையும், பொட்டையும்...''

''ஐயோ சொல்லாதீங்க... அந்தப் பிள்ளை யாரோ, என்னமோ... ஆனா, என்னைப் பொறுத்த வரைக்கும் திருப்பதி வேங்கடாஜலபதியே அவன்தான்...''

மாமனுக்கும், மருமகளுக்கும் இடையில் புகுந்த மீனாட்சி, அதற்கு மேல், கணவரின் பேச்சை வளர்த்த விரும்பாதவளாய், கண் கலங்கத் தழுதழுத்தாள்.

''இந்தாம்மா விஜி... அவன் எப்படிப் பட்டவனாயிருந்தாலும் சரி... அவன் செஞ்ச உதவிக்குப் பிரதிபலனா — அவனை வேலை வெட்டி ஏவாம, சும்மாவே மூணு வேளையும் சோறு போட்டாக் கூடத் தப்பில்லே... என்னங்க, அது குழந்தை, ஏதோ சொல்லுது... நீங்க அவனை நம்ம வீட்டோட தங்கச் சொல்லுங்க...''

விஜி, தன் மாமியின் அப்பாவித்தனம் மிகுந்த முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். கையிலிருந்த ஸ்லேட்டில் பரந்தாமன், எத்திராஜைச் சிலாகித்து எழுதிய " வரிகள்...

'பார்க்க நோஞ்சானா இருந்தாலும், பயலுக்கு அலாதி சுறுசுறுப்பு. கார் மட்டுமில்லே... ஜீப்பும் ஓட்டுவானாம்... தாய், தகப்பனில்லாத அநாதை... விஜி... உன் சந்தேகம் எனக்குப் புரியறது... இவன் நாணயமானவனா இல்லையாங்கறதைப் பல பரிசோதனைகள் வச்சுப் புரிஞ்சுக்கிட்டேன். காசைக் கண்டாலே நடுங்கறான். இவனோட

# சொல் ஒன்று வேண்டும்

அனுராதாரமணன்

விதவைத் தாய் அநியாயமா செத்ததுக்குக் காரணமே இந்தப் பணம்தானும்.... அம்மாவை நினைச்சா 'ஓ'ன்னு அழறேன்...'

என்னதான் பரந்தாமன் சமாதானமாக, பல வார்த்தைகளைச் சிலேட்டில் கொட்டினுலும், விஜியினுல அத்தனை சுலபமாக அவைகளை ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

இத்தனைக்கும் எத்திராஜ் முகத்தில், பரிதாபம் தான் பொங்கி வழிந்ததே தவிர— கடுகத்தனைக்குக் கூட கல்மிஷம் தெரியவில்லை...

முப்பது வயசுக்கும், அதிக வளர்ச்சியே இல்லாமல் சின்னப் பையன் மாதிரி இருந்தான் அவன். அதிக உயரமில்லை. ஐந்தடிக்குள்ளான சின்ன உடம்பு. முகத்திலும், கைகால்களிலும் வழிய வழிய எண்ணெயைப் பூசிக் கொண்டு வந்தாற்போல ஒரு பளபளப்பு. அவனது கறுப்பு நிறத்துக்கும், எண்ணெய் பளபளப்புக்கும்... தார் உருகி வழிவதைப் போல... உள்ளடங்கிய கண்களும், முகத்துக்குத் துளியும் பொருத்தமில்லாத பெரிய விடைத்த மூக்கும்... மீசை இருக்கிறதா இல்லையா என்பதைக் கொஞ்சம் உற்றுப் பார்த்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டும்...

உண்மையிலேயே, பரந்தாமன், எள் என்பதற்கு முன், எண்ணெயாக நிற்பவன்தான் எத்திராஜ்.



அங்கு வேலைக்குச் சேர்ந்த ஒரு வாரத்திலேயே — பரந்தாமனின் அன்றாட நடவடிக்கைகளை மனப்பாடம் செய்து கொண்டுவிட்டான் இவன்.

அவர் காரைக் கிளப்பச் சொல்ல வேண்டுமென நினைப்பதற்குள், வாசலில் கார் கதவைப் பிடித்தபடி தயாராக இருப்பான் எத்திராஜ்.

போதாக்குறைக்கு — காலை நேரத்தில் வேலைக்கு வந்ததும் முதல் காரியமாய், மீனாட்சி எங்கேயிருந்தாலும் தேடிப்போய், சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கி எழுந்த பின்தான் மற்றக் காரியங்களைக் கவனிக்கப் போவான்.

வயசான, சூது வாதறியாத பெண்மணிகளைக் குளிர்விக்க, இதை விடவும் சிறந்த உபாயம் கிடையாது என்பதை அவன் நன்றாகத் தெரிந்து வைத்திருந்தான்.

ஆனால்....

இவனது அளவுக்கு அதிகமான பணிவும், குழைவுமே, விஜியின் மனசில் விழுந்த சந்தேக வித்தைப் பெரிசாய் வளரச்செய்ய—

ஒருமுறை—

வேலை முடிந்து வீடு திரும்பிய பரந்தாமன், தனது நெடுநாளைய சினேகிதர் ஒருவரையும் அழைத்துக் கொண்டு வர.... அவரை, வீட்டிலுள்ளவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தபடியே, மாடிப்படிகளில் பத்து வயசுப் பையன் மாதிரி குதித்துஏற...

போகிற போக்கில் விஜியின் கன்னத்தைச் செல்லமாய் நிமிண்டியவர், தன் கையிலிருந்த ஃப்ரீப்கேஸை அவனிடம் தந்துவிட்டு நகர...

வழக்கமாய் நடப்பதுதான். விஜிதான் அவர் தரும் ஃப்ரீப் கேஸையும், அவிழ்த்துத் தரும் பெல்ட்டையும் வாங்கிக் கொள்வாள். பெட்டியில் எல்லாம் சரியாக இருக்கிறதா என்பதை ஒரு முறை பார்த்துவிட்டே உள்ளே கொண்டு வைப்பாள்...

பெட்டியின் மேற்புறத்தில் செருகி வைக்கப்படும் சிறிய டைரியைக் காணாமல், பரபரப்புடன் தேட....

'ஒருவேளை கையோட கொண்டு போயிருப்பாரோ...'

உடனே ஓடிப் போய்க் கேட்க நினைத்தவள், பரந்தாமனுடன் அவரது சினேகிதர் இருப்பது நினைவுக்கு வர, சற்றுத் தயங்கினாள்.

ரொம்பவும் பழகிய மனிதர்கள் ஓரிருவரைத் தவிர, மற்றவர்கள் எதிரில், சிலேட்டும் கையுமாக ஓடிப் போய் நிற்க மாட்டாள் அவள்.

பிறவி ஊனம், நெஞ்சுக்குள் இதுமாதிரியான தாழ்வுணர்ச்சிகளைத்தான் எத்தனை வேகமாய் வளர்க்கிறது...

யோசித்துப் பார்த்தவளுக்கு—

மாமா, தன் டைரியைக் காரிலேயே விட்டிருந்தாலும் விட்டிருக்கலாம் என்று தோன்ற...

கார் அதற்குப் பக்கத்திலிருந்த 'ஷெட்'டுக்குப் போய் விட்டதால், அவள் பாவாடை விசிற அங்கு ஓட....

ஷெட்டின் மங்கிய விளக்கொளியில், கதவை திறந்து வைத்துக் கொண்டு ஒரு கால் வெளியிலும், மறுகால் காருக்குள்ளுமாய், சுதந்திரமான சூழ்நிலையில் எத்திராஜ்...

அவனது கையில் பரந்தாமனின் டைரி!

அவசர அவசரமாய் டைரியைப் புரட்டி, தனது கையிலிருந்த காகிதத்தில் எதையோ குறித்துக் கொண்டிருந்தவன், காலடிச் சத்தம் கேட்டுப் பதறிக் கொண்டு எழ....

அந்த நேரத்தில் விஜியை, அந்த இடத்தில் சற்றும் எதிர்பாராதவனாய் அவன் மிரண்டு போகிறான்... மிரட்சியையும் மீறி அசட்டுச் சிரிப்பு... சிரிப்பையும் மீறி, 'இந்த ஊமைப் பெண்ணால் நம்மை என்ன செய்துவிட முடியும்' என்கிற பார்வை....

''வ... வந்து டைரி... இதுல அம்மா போட்டோ இருந்துச்சா... அதான் கும்பிட்டுக்கிட்டு இருந்தேன்...''

அவன், அவளுக்குப் புரியுமா புரியாதா என்கிற சிந்தனையே இல்லாமல் உளறிக் கொட்டியபடி, டைரியின் உட்புற அட்டையில் இருந்த மீனாட்சி, பரந்தாமனின் புகைப்படத்தைச் சுட்டிக் காட்டினான்.

அவள் மௌனமாய், டைரியை வாங்கக் கைநீட்டினாள். அவன், 'சட்'டென டைரியிலிருந்த புகைப்படத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டான். மிக பவ்யமாய், உடம்பை வளைத்து டைரியை நீட்டினான்.

அவள் பிடுங்காத குறையாக அதைப் பறித்துக் கொண்டாள். அதற்குப் பின்பும் அந்த இடத்தை விட்டு அசையாமல் 'குறு குறு'வென அவனையே பார்த்தாள்.

---

இந்த வீட்டை மடக்கி எடுத்துப் போய் விரும்பிய இடத்தில் மறுபடி நிமிர்த்திக் கொள்ளலாம். சுவர்களில் கில் பொருத்தப்பட்டிருப்பதால் எளிதில் மடங்கி, நீள்கிறது. மடிப்பு நீங்கி வீடாக உயர்வதற்கு உட்புறம் பலூன் போன்ற அமைப்பில் காற்றை 'பம்ப்' செய்து செலுத்தினால் போதும். உயர்ந்த பின் கில் பகுதி மறுபடி மடங்கி விடாதிருக்கத் தாழ்ப்பாள்கள் போட்டுவிடலாம். தாழ்ப்பாளை நீக்கி மறுபடி வீட்டை மடித்து எடுத்துக் கொண்டு போகலாம்!

—நியூஸ்வீக்.



அவன் உடம்பில், கரப்பான் பூச்சி ஊர்வது போல நெளிந்தான்.

'இன்னும் என்ன வேணும் இவளுக்கு...'

அவள் மீண்டும் கையை நீட்டினாள்...

''என்...ன...''

அவள், அவனது பேண்ட் பாக்கெட் பக்கம் சுட்டிக் காட்டினாள்...

அதில்...

டைரியிலிருந்து அவன் எடுத்த குறிப்புகள் அடங்கிய காகிதம்...

அதிர்ந்து விட்டான் எத்திராஜ்...

அவன், 'விருட்'டென அந்தாளை உருவிச் சுக்கல் சுக்கலாக, உருத்தெரியாமல் கிழித்தெறிந்தான்...

''அம்மா படத்தை வ ரை ஞ் சு பார்த்தேன்... அத்தனைதான்...''

வியர்வை ஆறாய்ப் பெருகும் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டான் அவன்.

அவள், அவனை ஆழமாய் ஒரு பார்வை பார்த்து விட்டு நகர்ந்தாள்...

இதுபற்றி — பரந்தாமனிடம் சொல்ல வேண்டுமென அவள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் அத்தனையும் வீண்.

நாலைந்து நாட்கள் கழித்து அவன், கையில் பேப்பர் சுற்றிய ஃபிரேம் போட்ட படத்துடன் வந்து, பரந்தாமனின் எதிரில் நின்றான்.

''என்னப்பா இது...''

' ஆயில் பெயிண்டிங்குங்க... அம்மாவையும், உங்களையும் வரைஞ்சேன்...''

''அடேடே... நீ வரையக் கூட செய்வியா... உனக்குத் தெரியாத விஷயமே இல்லேன்னு சொல்லு...''

பரந்தாமன் வாய் விட்டுப் பாராட்ட, மீனாட்சி தங்களது படத்தையே பூரிப்புடன் பார்த்துக் கொண்டிருக்க, விஜி எத்திராஜின் ஒவ்வொரு அசைவையுமே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருக்க....

அவன், அத்தம்பதியரை நிற்க வைத்து, ஓவியத்தை அவர்களது கையில் கொடுத்து விட்டு, தரையில் விழுந்து வணங்கினான்.

'பாரும்மா.... என்னமோ, அவனைப்பத்தி இல்லாததும் பொல்லாததுமா சொன்னியே...'

—மீனாட்சி, பார்வையாலேயே மருமகளை வினவினாள்.

பரந்தாமனிடம் இத்தனை பதவிசாக நடந்து கொள்ளும் எத்திராஜ் — எடுத்த எடுப்பில் விஜியிடம் மட்டுமல்லாது ராஜாவிடமும் கசப்பைச் சம்பாதித்துக் கொண்டான்.

ஒருநாள் ஹாலில் யாருமில்லாத சமயத்தில், எத்திராஜ் யாருக்கோ அவசரமாய் டெலிபோன் செய்து கொண்டிருந்தான். ராஜா அந்தப் பக்கம் வரவே, ரிஸீவரைப் 'பட்'டென வைத்து விட்டான்.

''யாருக்குடா போன் பண்ணினே...''

''யாருக்குமில்லே சார்... மணியடிச்சது. எடுத்தேன். நின்னுடுச்சு.....''

'நச்'சென்று பின் மண்டையில் ஒரு தட்டு தட்டினான் ராஜா.

இதற்குப் பிறகு அடிக்கடி, ராஜாவின் கையால் அவன் உதை தின்றிருக்கிறான்.



மகன்: அப்பா! எனக்கொரு சேர் எப்ப வாங்கறீங்க?

ராஜா அடித்தால், அவன் எதிர்க்கமாட்டான். அத்தனை அடியையும் வாங்கிக் கொண்டு, கல்லடி பட்ட நாய் போல் கீழ்ப் பார்வை பார்த்தபடி ஒதுங்கிப் போய் நிற்பான்.

''உன்னை... ஒருநாள் இல்லாட்டி ஒரு நாள் உள்ளே தள்ளறேனா இல்லையா பாரு... இப்படிப்பட்ட அயோக்கியன்களைத்தான் அப்பாவும் நம்புவாரு... இருக்கட்டும்....''

ராஜாவின் உறுமல் அத்தனையையும் செவி மடுத்தபடி... நட்டு வைத்த செருப்புக்குச்சி மாதிரி எத்திராஜ் நிற்பான்.

அப்பேர்ப்பட்டவன், நீட்டி முழக்கிக் கொண்டு, இன்ஸ்பெக்டரிடம் என்ன சொல்கிறான்...

விஜி, கேளாத செவிகளை மனசுக்குள் சபித்தபடியே அவனது உதட்டசைவையே உற்றுப் பார்க்கிறாள்...

''சின்ன யசமானுக்கும், அந்த ஆளுக்கும் ஏற்கெனவே விரோதம் உண்டுங்க. முந்தா நாளு கூட எங்க ஐயா — அதான் சின்ன யசமான் — அந்த ஆளு சட்டையைப்பிடிச்சு உலுக்கினாரு... ரெண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் அடிச்சுக்கிட்ட அடியும், பேசின பேச்சும்... அப்பப்பா...''

இன்ஸ்பெக்டர் முகத்தில் சுவாரஸ்யம் இழையோடுகிறது...

''எதுக்குப்பா சண்டை போட்டுக்கிட்டாங்க...''

''அது தெரியாதுங்க... சின்ன ஐயா வேலை பார்க்கிற கம்பெனி வாட்ச்மேன் இல்லே... அவனைக் கேட்டா விசயம் தெரியும்....''

''எத்திராஜ்...''

உமா, அழுகை முட்ட கெஞ்சாத குரலில் அவனை அழைக்கிறாள்...

அவனோ—

''எங்க சின்ன யசமான் கொஞ்சம் முன் கோபக்காரருங்க. என்னையே நிறையவாட்டி புரட்டி எடுத்திருக்காரு. ஆனா நல்லவருங்க. கொலை எல்லாம் செய்ய மாட்டாரு... ஏதோ ரத்தம் வரும்படி அடிச்சிருக்கலாம்.''

சொல்லிக் கொண்டே போகிறான். அவனது வார்த்தைகள் ஒவ்வொன்றையும், இன்ஸ்பெக்டருக்கு அருகிலிருந்த கான்ஸ்டபிள் ஒருவர் தமது சிறிய நோட்டுப் புத்தகத்தில் வேகமாய்க் குறித்துக் கொள்கிறார்.

(தொடரும்)

ஆயிற்று...

சஞ்சயனம் முடிந்து சாம்பலைக் கூடக் கரைத்து முடித்து... நாலு மணி நேரம் கடந்து விட்டது.

அனுதாபங்களை அள்ளித் தெளித்துவிட்டு அத்தனை பேரும் மெல்ல மெல்லக் கரையத் தொடங்கினார்கள்.

இருக்கும் மீதிப் பேரும் 'பாக்கிங்'கில் தீவிரமாக இருந்தார்கள்...

மெள்ளத் தலையை உயர்த்திய ராம், சன்னமாக அதிர்ந்தான்...

எதிரே... புஷ்பா...

''நீங்க... நீங்க இன்னும் போகலையா புஷ்பா?'

மௌனமாக இருந்தாள் புஷ்பா....

''ரொம்ப தாங்க்ஸ் புஷ்பா... ஆரம்பத்துலேயிருந்தே எனக்காக நீங்க ரொம்ப கஷ்டப்படறதா தெரியறது...''

' ஓ... நோ...'' சட்டெனக் குறுக்கே புகுந்தாள்... ''இந்த வலி என்னன்னு எனக்கு எல்லோரையும் விட அதிகமாகவே தெரியும்... அந்தக் காயத்தோட பாதிப்பைக் கொஞ்சம் ஆழமாகவே உணர்ந்திருக்கேன் நான்... எனக்கு புருஷன்... உங்களுக்கு மனைவி... மற்றபடி மாறுதல் எதுவும் இல்லை...'' சின்னக் குரலில் மெதுவாகச் சொன்னாள்...

'ஓ... இவளும் பறிகொடுத்தவள்தான்..'

அந்த நினைவு அப்போது தான் ராமுவுக்குள் எட்டிப் பார்த்தது...

கொஞ்சம் சந்தோஷமாகக் கூட இருந்தது... நம்மைப் புரிந்து கொள்ள இன்னொரு ஜீவன்...

''நானும் புறப்படட்டுமா ராம்? முடிஞ்சா சாயங்காலம் வர்றேன். எப்ப ட்யூட்டிக்கு வரப் போறீங்க?''

''அதைப் பத்தி யோசிக்கத் தோணலைங்க புஷ்பா...''

''சீக்கிரம் வந்துருங்க... இந்த வீடும், சூழ்நிலையும் உங்களை ரொம்பவும் சேதப்படுத்தும்... கொஞ்ச நாளைக்கு இதை நீங்க தவிர்க்க முயற்சி பண்ணணும்... அதுக்கு உங்களுக்கு ஆபீஸ்தான் ஒரு வடிகால்.... நான் வரட்டுமா?''

அவள் போய் வெகு நேரமாகியும் பிரமை பிடித்தது போல உட்கார்ந்திருந்தான்....

மெல்ல எழுந்து உள்ளே போய்க் கட்டிலில் உட்கார்ந்து கொண்டான்.

'க்ரீச்' என்றது...

'ம்... மெதுவா...'

'ஏன் அப்படிச் சொல்றே ராதா?'

'நீங்க என்னை இழுத்த வேகத்துல, கட்டில் அழறது...'

'ஓ... சத்தத்தைச் சொல்றியா?'

'ஸ்... கொஞ்சம் மெதுவாப்பேசுங்க.... கட்டிலே தேவலை போல இருக்கு...'

'ஏன் பயப்படறே?'

'இது பயமில்லை... கூச்சம்... நாலு பேருக்குத் தெரியணுமாங்கற எண்ணம் தான்...'

'அந்த நாலு பேருக்கும் இதெல்லாம் புரியும்... எல்லாரும் எல்லாத்தையும் பார்த்தவா தான்...'

ராம் மெதுவாக அழத் தொடங்கினான்....

'ஏன் போனாய் பெண்ணே? அதற்குள் என்ன அவசரம்? அந்தரங்கத்தைக் கூட ஒரு மௌனக் கவிதையாகப் படித்தவள் சாம்பலாகிச் சடுதியில் கரைந்துவிட்டாள்..'

உன்னை நான் மறக்கணும்...

உடனே மறக்கணும்...

அவசரமாக ஒரு சிகரெட்டை எடுத்து உதட்டுக்குத் தந்து, தீக்குச்சியைக் கிழித்தான்...

'இது இன்னிக்குப் பத்தாவது சிகரெட்...! ஆனால் அன்று...

'ஓ. கே., உங்க உதட்டுக்கு சிகரெட்டுதான் முக்கியம்னு அப்புறமா... இன்னொண்ணு கிடைக்காது... எது உங்க சாய்ஸ்னு நீங்களே தீர்மானிச்சுக்கணும்... கமான்!'

ஒருவித வெறுப்போடு அந்தச் சிகரெட்டைத் தூக்கி எறிந்து விட்டுக் கட்டிலில் குப்புற விழுந்தான்...

கட்டிலோடு சேர்ந்து முதுகு குலுங்கியது.

ஆபீசுக்குள் அவன் நுழைந்தபோது மிச்சம் மீதி அனுதாபங்களும் சேர்ந்து கொண்டு இருப்பதை எல்லாம் இனறி விட்டது...

'குட்மார்னிங் ராம்...'

'ஹலோ புஷ்பா...'

அதற்கு மேல் என்ன கேட்பது என்று தெரியாமல், ஐந்து நிமிஷம் போல அவனையே பார்த்து விட்டுத் தன் சீட்டுக்குப் போனாள் புஷ்பா...

வேலையில் தன்னை நுழைத்துக் கொண்ட ராம், அதில் மூழ்கிப் போய்ச்

# இரண்டாவது இன்னிங்ஸ்

தேவிபாலா

சாப்பாட்டு வேளை வந்ததைக் கூட மறந்து போனான்...

எதிரே நிழலாடியது..

''மணி இப்ப ரெண்டு . லஞ்ச் டைம் முடியப் போறது...''

''பசிக்கலேங்க புஷ்பா...!''

''நோ... ராம் ... உங்களை நீங்களே அழிச்சுக்கறது தப்பு... என்னைப் பாருங்க.... நான் சாப்பிடலையா? உப்பும் காரமும் சேரச் சேர உணர்வுகள் சமனப்பட்டுடும்... ப்ளீஸ் ராம்...''

''ஓ. கே...'' மெதுவாக எழுந்தான்.

''எங்கே?''

''கேன்டீனுக்குத்தான்... ஞானிமே அது தானே!''

''தெரிஞ்சுதான் உங்களுக்கும் சேர்த்து நானே கொண்டு வந்திருக்கேன்... 'எவர் சில்வர் சம்படத்தை எடுத்து மேஜையில் வைத்தாள்... இந்தாங்கோ எலுமிச்சை சாதம்... பிடிக்குமா?''

விரக்தியாகச் சிரித்தான்... அவள் முகம் பார்த்து. ''ரொம்ப தாங்க்ஸ் புஷ்பா'' என்றான்...

அன்று புஷ்பா ஆபீசுக்கு வரவில்லை....

இப்போதெல்லாம் அவளைப் பார்க்காமல் ஒரு விநாடியைக் கூட நகர்த்துவது ராமுவுக்கு நரகமாக இருந்தது...

ராதா மறைந்த இந்த மூன்று மாதத்தில் கணிசமாக அந்தப் பிரிவின் பாதிப்பிலிருந்து அவனை மீட்டுக் கொண்டு வந்தவள் புஷ்பா தான்...

டெஸ்பாட்ச் செக்ஷனில் போய்ப்பார்த்த போது புஷ்பாவின் லீவு லெட்டர் இருந்தது...

மூன்று நாட்கள் லீவு...

வழக்கமான மூன்று நாட்களோ....?

இருக்காது... இதுக்காகப் போய் எந்தப் பெண்ணாவது ஆபீசுக்கு லீவு போடுவாளா?

மண்டையைக் குடைந்து கொண்டான்... விடை கிடைக்கவில்லை...

கெகிக்காக ஏங்கிக் கொண்டிருந்தவர்கள் மத்தியில், சுவாரசியமாக ஒரு






இரைக்கதை உருவாகிக் கொண்டிருந்தது. அதை அரங்கேற்றம் செய்யக் கதாநாயகி யின் வரவை அந்த ஆபீஸே ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தது....

நாலாம் நாள் புஷ்பா நுழைய...

அத்தனை கண்களும் ஆர்வத்தோடு மொய்த்தன...

''ஏன் மூனு நாளா லீவு?'' ராம் அவசர மாகக் கேட்டான்.

''கொஞ்சம் 'பர்ஸனல் வொர்க்' அதான்''

சட்டென முகம் விழுந்து விட்டது... 'பர்ஸனல் வொர்க்' என்ற வார்த்தை பலமாக ஒரு அடி போல விழுந்திருக்கவேண் டும்... அந்த வார்த்தை இடையில் தொங்க விட்ட ஒரு திரைபோல, குறுக்கே வெட்டிய பெரிய அகழி போல் பூதாகாரமாக மிரட்டி யது...

எங்கிட்ட சொல்லக் கூடாத அளவுக்கு என்ன பர்ஸனல் வொர்க் இவளுக்கு?

''என்ன ராம் பலமான யோசனே?'' -புஷ்பா.

''அ... ஆங்... ஒண்ணுமில்லிங்கபுஷ்பா..''

''இதானே வேணுங்கறது... எனக்குத் தெரியாதா உங்களைப் பத்தி...?''

''ஆனா எனக்குப் புரியலையே உன்னைப் பத்தி!'' சட்டென நாக்கு துள்ளிக்கொண்டு வார்த்தைகள் ஒருமையில் வந்து விழ, திடுக்கிட்டு நிமிர்ந்தான்...

''பரவாயில்லே... டேக் இட் ஈஸி! என்ன புரியணும் என்னைப் பத்தி உங்க ளுக்கு?''

''ஐ'ம் ஸோ ஸாரி...''

''ஈஸி ராம்... சும்மாச் சொல்லுங்க... இந்த நிமிஷம் இந்த ஆபீசே மாதிப்போயி ருக்கு. சாயங்காலம் உங்களுக்கு வசதிப் படுமா ராம்?''

''எதுக்கு?''

''ஆபீஸ் விட்டு ட்ரைவ்–இன் வரைக்கும் போகணும்... உங்க கூட கொஞ்சம் தனியா பேசணும்...''

''வித் . ப்ளெஷர்...''

''**சொ**ல்லுங்க புஷ்பா...'' காப்பியை எடுத்து மெல்ல உறிஞ்சிய ராம் அவளைப் பார்த்தான்...

''ஆபீஸ்ல புதுசா ஒரு கதை உருவாகத் தொடங்கியாச்சு...'' - புஷ்பா.

''அதுனால?''

''எந்தக் கதையுமே பாதில நிக்கக் கூடாது ராம்...''

''அடுத்தவங்க தொடங்கி வக்கறதை அவங்களே முடிச்சுட்டுப் போகட்டும்.... நாம கவலைப்படுவானேன்...''

''ஆனா, நான் கவலைப்படணும் ராம்... ஏன்னா நான் ஒரு பெண்... ஒரு விடோவும் கூட... போகட்டும்... இன்னிக்கு உங்க ளுக்குக் காலேல ஒரு கோவம் வந்ததே எங்கிட்ட... அது ஏன்?''

''புரியலே புஷ்பா... மனசை மறைக்காமச் சொல்லணும்னு ஒருவித சுயநலந்தான்... நீ 'பர்ஸனல் வொர்க்'னு சொன்னப்ப என்னைப் பிரிச்சு வச்ச மாதிரி பட்டுது... காரணம் நீங்... நீதான்... உன்னோட இந்தக் கொஞ்ச நாளைப் பிரிவு உங்கிட்ட அதிகப்படியான உரிமையை நான் எடுத் துக்க... ஐ மீன், மனசளவில... காரணமாக் கூட இருந்திருக்கலாம்... அதெல்லாம் தப்புனு இப்பத்தான் நான் புரிஞ்சுக்கிட் டேன்...''

''தப்புனு நான் சொல்லலேயே... உங்க ளுக்கு ஒரு பெண் துணை வேணும்... எனக்கு ஆண்... நாம ஒருத்தரையொருத்தர் துணை யாக மாத்திண்டா தப்பொண்ணும் இல் லேயே!''

வாய்க்குள் சூடாக அதுவரை நுழைந்த காப்பி தொண்டையில் 'ஜில்'லென்று இறங்கியது போல உணர்ந்தான் ராம்.

''ஆபீசுல இதுக்கு என்ன கமெண்ட் தெரியுமா ராம்? ஸெகண்ட் இன்னிங் ஸாம்...''

''பாண்டாஸ்ட்...''

''ஏன் திட்டறீங்க? நிஜம் அதுதான் ராம்... முதல் இன்னிங்ஸ் ரெண்டுபேருமே விளையாடினோம். தனித்தனியா. ஆனா பார்ட் னர் நீடிக்காம போனது ரெண்டுபேருக் குமே துரதிர்ஷ்டம்... ரெண்டாவது இன் னிங்ஸை நாம ரெண்டு பேருமா சேர்ந்து விளையாடிப் பார்க்கலாமே... இந்த முறை யாவது அதிர்ஷ்டம் நம்ம பக்கம் இருக் கட்டும்...''

''உங்களால எப்படி புஷ்பா இவ்வளவு வெளிப்படையாய்ப் பேச முடியறது?''

''மூடி வச்சு யாருக்கு லாபம் ராம்? நானும் துறவி இல்லே... ரத்தமும், சதை யுமா வளைய வர்ற சாதாரணப் பெண் தான்... சரினு பட்டதைச் செஞ்சா

# *In Trust For The People...*

The entire wealth gathered by the Founder of Tata Enterprises, and his sons and successors, over almost a century of industrial pioneering is bequeathed to Tata philanthropic trusts and foundations.

The whole of that wealth is held in trust for the people and used exclusively for their benefit—scholarships for education, grants for rural welfare, contributions for medical research, support for national institutions, and donations for relief from natural disasters.

The circle is thus complete: what came from the people goes back to the people many times over.



**TATA ENTERPRISES**

என்ன தப்பு? விடோன்னு ஆனப்புறம் மறுநாளே சன்னியாசியா ஆறதாச் சொன்னு அது பொய்... உணர்வுகளைக் கட்டுப்படுத்த யாராலேயும் முடியாது ராம்... முட்டாக்குப் போட்டுட்டு மூலைல நின்னு எட்டிப்பாக்கற ரகம் இல்லே நான்... என்னைப் பத்தி இனிமே நான் சொல்லத் தொடங்கலாம்னு நினைக்கறேன்...''

''எதுக்கு? இதுக்கு மேலே என்ன இருக்கு? பாஸ்ட் ஈஸ் பாஸ்ட்... தோற்றுப் போன முதல் இன்னிங்ஸைப் பத்தி இனிமே பேசி என்ன லாபம் புஷ்பா? ஆடப்போற புதிய இன்னிங்ஸைப் பத்தி யோசிக்கலாமே!''

'' 'டக்' அடிச்சதுனாலே உங்களுக்குப்பேச எதுவும் இல்லே... ஆனா நான் 'ரன்' எடுத்திருக்கேனே... உங்களுக்கு அதைக் காட்ட வேணுமா?''

''புரியலே...''

''நாளைக்குப் பத்து மணிக்கு எங்க வீட்டுக்கு வாங்க... அப்பப் புரியும்... இப்பப் போகலாமா? இருட்ட ஆரம்பிச்சாச்சு...'' எழுந்து கொண்டாள்...

**அ**ந்தத் தெருவில் நுழைந்தபோது ஒருவித ஆர்வக் குறுகுறுப்பில் நெஞ்சு படபடத்தது ராமுவுக்கு...

எதிர்பார்த்தது போல அவசரமாக ஓடி வந்து கதவைத் திறந்தாள் புஷ்பா...

''இருங்க... காஃபி கொண்டு வர்றேன்..'' உள்ளே போனாள்...

கண்களைச் சுழற்றி வீட்டை ஒருமுறை பார்த்தான் ராம்... ஆட்டக்குதிரை ஒன்று ஓரத்தில் நின்று இவனைப் பார்த்துச் சிரித்தது...

அங்கங்கே பொம்மைகள்...

கிழிந்து போன வாரப் பத்திரிகையொன்று..

ஈரம் பட்டுக் கசங்கிப் போயிருந்த சின்ன ஜட்டியொன்று...

மெதுவாக குழந்தை ஒன்று அழும் ஒலி சன்னமாகக் கேட்க ஆரம்பிக்க,

அத்தனையும் புரிந்து போனது அவனுக்கு..

அவள் எடுத்த 'ரன்' எது என்று சர்வ நிச்சயமாகத் தெரிந்தது...

அதைக் காட்டித் தரத்தான் இப்போது அழைத்திருக்கிறாள்...

சட்டென அந்த எண்ணம் அவனை பலமாகத் தாக்கியது... அந்த நினைவின் ஆக்கிரமிப்பு விநோதமாக இருந்தாலும் அவனால் கட்டுப்படுத்த முடியவில்லை...

இவள் எடுத்த இந்த ரன் எப்பவும் இவளோட அக்கௌண்ட்லதானே இருக்கும்... இதைப் பார்க்கும் போதெல்லாம் இதுக்குக் காரணமான அந்த முதல் இன்னிங்ஸ் கட்டாயம் நினைவுக்கு வரும்... ஜோடி சேர்ந்து ஆடின ஆட்டக்காரனையும் அவளால மறக்கவே முடியாது...

எங்கோ பிசிறடிப்பது போலத் தோன்ற மெல்ல எழுந்தான் ராம்...

ஒரு ஆணுக்கே உள்ள 'பொஸஸிவ்நெஸ்' மெல்ல, மெல்ல அவனை விழுங்கத்தொடங்க,

ஓசைப்படாமல் வாசலைப் பார்த்து நடக்கத் தொடங்கினான்...

''ராம் இந்தாங்க காபி... ரொம்ப நேரமா...'' பட்டென்று பேச்சு அறுபட, காலி ஸோபா அவளைக் கேலி செய்தது...

ஏன் போய்ட்டார்?

கின்னுச்சு இமர்னு?

அசட்டுப் பெண்ணே! கன்றோடு வரும் பசுவை எந்தக் காளையும் திரும்பிப் பார்க்காது என்பது உனக்கு ஏன் புரியவில்லை?

உள்ளே...

குரலெடுத்து அழத் தொடங்கியது முதல் இன்னிங்ஸ்...

---

கணவன்: ஏண்டீ! பய அழுதுக்கிட்டிருக்கானில்ல, கேட்கலியா உனக்கு? அவன் கேட்கறதைக் கொடுத்துத் தொலைக்கறதுதானே?

மனைவி: அவனுக்குப் பொண்டாட்டி வேணுமாம்! நான் எங்கேயிருந்து கொண்டு வரது?

உதய்

உதய்

மனைவி: என்னங்க! நாம பெரியவங்களை எதிர்த்துக் கல்யாணம் பண்ணிக்கிட்டது எனக்கென்னவோ பயமாயிருக்கு.

கணவன்: எனக்கும் அப்படித்தான் இருக்கு. பேசாம 'டைவர்ஸ்' செய்துக்கலாம்!



# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு குணா

## கூந்தல் தைலம்

தலைமயிர் உதிர்தல் செம்பட்டை நிறம் பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்கு தேய்த்து வந்தால் தலைமயிர் நீண்டு கருத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு பொடுகு மண்டையில் சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர்.

**V.P.P.** மூலம் பெற ரூ.16.25 (தபால் செலவு இலவசம்)

விபரங்களுக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
த.பெ.எண்: 7, சேலம் 636 001

**எமது தைலம் கிடைக்குமிடங்கள்:** ஹேமா மெடிக்கல்ஸ், மெமோரியல் ஹால் தெரு, சென்னை-3-வேலவன் மெடிக்கல்ஸ்—அமிஞ்சிக்கரை, சென்னை, திருமகள் மெடிக்கல்ஸ்—குடியாத்தம், சித்ரா மெடிக்கல்ஸ்—கடலூர், ரோசு மெடிக்கல்ஸ்—சேலம், முத்து மெடிக்கல்ஸ்—ஆத்தூர், கஸ்தூரிபா மெடிக்கல்ஸ்—நாமக்கல், கோபாலகிருஷ்ணா மெடிக்கல் ஸ்டோர்ஸ்—கிருஷ்ணகிரி, மூர்த்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ்—ஓசூர், காசிநாத் மெடிக்கல்ஸ்—கோவை, அன்னபூர்ணா மெடிக்கல்ஸ், ஜவகர் பஜார்—கரூர், சண்முகா மெடிக்கல் ஹால் திருச்சி, குமார் மெடிக்கல்ஸ்—மதுரை, கோமதி மெடிக்கல்ஸ்—பூர்ணகலா தியேட்டர் அருகில், திருநெல்வேலி, பிரசாத் ஸ்டோர்ஸ்-25 K. G. சர்க்கிள், பெங்களூர் நல்ல பெருமாள்-கெமிஸ்ட் & டிரக்கிஸ்ட், நாகர்கோவில்.

---

## சென்னை - பழனியில் சிகிச்சை



Dr. S.K.

உலகப் புகழ் பெற்ற பழனி சித்த வைத்தியபதி **Dr. S. சுசாமிமுத்து,** R.M.P. (IND) V.V.C., A.M.I.H. R.A.M.P. R.H.M.P. அவர்களின் சுற்றுப் பயணத்தில் அல்லது பழனியில் நேரில் சந்தித்து ஆலோசனைபெற்று இதுவரை கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுகவாழ்வு பெறலாம். உங்கள் பிரச்னையான தாம்பத்திய வாழ்வில் மாறுபாடு - சோர்வு - அணுக்கள் குறைவு - வீரியமின்மை - குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை நரம்பு தளர்ச்சி - தேக உறுப்புகள் மெலிவு - கெட்ட கனவுகள் - தூக்கம் இல்லாமை - குழந்தைச் செல்வம் இல்லாமை - வெட்கம் - நடுக்கம் - தோல்வி - ஆ. இருமல்-வாதநோய் - சரும நோய் - குடல்புண் - வயிற்றுக் கோளாறுகள் - நவமூல வியாதிகள் மற்றும் இதர வியாதிகளுக்கும் 86 வருட அனுபவ மருந்துகள் பெற்று சுகவாழ்வும் - மறுமலர்ச்சியும் பெறலாம்.

### ஒரு மாதம் சிகிச்சை மருந்துகள்

| | | | |
|---|---|---|---|
| தங்க பஸ்பம் | தங்க பஸ்பம் | மிக உயர்தரம் | ஆ. இருமல் செட் |
| மிக உயர்தரம் | சிட்டுக்குருவி லேகியம் | மிக உயர்தரம் செட் | ரூ. 124-226 |
| ரூ. 330. | 90 வேளை ரூ. 180 | ரூ. 90 | வயிற்றுவலி செட் |
| சூபர் செட் ரூ. 600 | 60 வேளை ரூ. 120 | சரும நோய் செட் | ரூ. 92. |
| சூபர் செட் ஏ ரூ. 900 | 30 வேளை ரூ. 60 | ரூ. 140 - 260 | |

சென்னை விஜயம் தேதிகள் 1-2-10-11-17-18-19.

**நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்,** எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, சென்னை-4, போன்: 83111

நேரில் ஆலோசனை பெற: 12ந் தேதி காஞ்சிபுரம், ஸ்ரீராமா லாட்ஜ், காலை 10 - 12 மணி. 12 அன்ட் 20ந் தேதி பெங்களூர், ஹோட்டல் பிராட்வே, காலை 10 - 2 மணி. 12ந் தேதி ஆரணி, பாலாஜி லாட்ஜ், பகல் 3 - 5 மணி. 13ந் தேதி வேலூர் என். ஏ. அஜீஸ் மேன்ஷன்ஸ், காலை 10 - 12 மணி. 13ந் தேதி குடியாத்தம் அலங்கார் லாட்ஜ், பகல் 3 - 5 மணி. 13ந் தேதி கிருஷ்ணகிரி, ஸ்ரீராம் லாட்ஜ், காலை 9 - 10 மணி. 13ந் தேதி தர்மபுரி சீனிவாசா லாட்ஜ், பகல் 12 - 1 மணி. 13ந் தேதி சேலம், லட்சுமி ராஜ்பவன், பகல் 2 - 5 மணி. 14ந் தேதி மதுரை சந்தானம் லாட்ஜ், காலை 8 - 12 மணி, மாலை 2 - 4 மணி. 15ந் தேதி ஈரோடு நவபவனம் லாட்ஜ், காலை 10 - 12 மணி. 15ந் தேதி திருப்பூர் ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ் பகல் 2 - 4 மணி. 16ந் தேதி கோவை விஜயா லாட்ஜ், காலை 9 - 12 மணி. 22ந் தேதி கோவை ஹோட்டல் குரு, காலை 10 - 12 மணி. 22ந் தேதி பொள்ளாச்சி. 23ந் தேதி முதல் 31ந் தே வரை பழனி தலைமை வைத்தியசாலை. 13 - 24ந் தேதி ஹோட்டல் செலக்ட், காலை 10 - 4 மணி.

**பழனி சித்தர் வைத்தியசாலை,** (REGD) பழனி—624 601
போன்: 316, 316-ஏ, 420, 630 தந்தி: சித்தர்



# நிலா நிலா ஓடி வா...

சுபா

தினகரனுக்கு அன்றைக்கும் அந்தக் கனவு வந்தது.

நாய் ஒன்று பக்கத்தில் நின்றிருந்தது. முகம் வராகம் மாதிரி நீண்டிருந்தது. லேசாய் உறுமி விட்டுப் பல்லைக் காண்பித்தது. மேல் உதடை இன்னும் மேல் புறமாய் மடித்துக் கோரைப் பற்களைக் காண்பித்தது. அடி அடியாய் எடுத்து வைத்து அவனை நெருங்கியது. இடது பக்கத்தில் மீசை வைத்த பூனை ஒன்று 'ம்யாவ்' என்று சீறியது.

மனத்தில் ஒரே பீதியாய் இருந்தது. உள்ளங்கையை ஊன்றி எழுந்திருக்க முயல கையில் தொப்பென்று மார்பில் விழுந்து, அங்கிருந்து தரையில் துள்ளி விழுந்தது ஒரு பல்லி. சட்டென்று அது மறைந்து போக அதன் வால் மட்டும் துள்ளித்துள்ளி அம்மானை ஆடியது.

நாய் அவன் மேல் பாயப் போகிறமாதிரி முன்னங்கால்களை நீட்டி வைத்திருந்தது. போதாததற்கு வாசலில் இன்னொரு நாய் நின்று 'வவ்வ்' என்று சின்னதாய்க் குரல் கொடுத்தது.

அவ்வளவு பெரிய கூடத்தில் யாருமே இல்லை. அப்பாவைக் காணவில்லை. அப்பாவிற்குப் பக்கத்தில் படுக்கும் பவானியைக் காணவில்லை. முக்கியமாய் அம்மாவைக் காணவில்லை.

வெறும் சுவர்க் கோழியின் ரீங்காரம் தான். கர்ப்பக்கிரகத்துத் தூங்காவிளக்கு மாதிரி ஜீவனில்லாமல் மங்கலான மின் விளக்கு மங்கலாய்த் தெரிந்தது. தினகரன் பார்த்துக் கொண்டிருந்த போதே பல்லி வால் திடுதிடுவெனப் பருக்க ஆரம்பித்தது. நாயும், பூனையும் சிறுத்தை அளவாகி, இன்னும் பருத்துக் கோயில் மாடு மாதிரி வளர்ந்தன.

தினகரன் பயத்தில் கண்ணை இறுக மூடிக் கொண்டான்.

'அம்மா...' என்று அடித்தொண்டையிலிருந்து கத்தினான். கண்ணைத் திறந்துபார்த்தான். வராக நாய் சிறுத்துப் போயிற்று. பூனை பழைய படிக்குக் குறைந்தது. பல்லி வால் மெலிதாயிற்று.

'அம்மாவ்' என்று மறுபடியும் கூவினான்.

நாயும், பூனையும், பல்லி வாலும் குண்டூசித் தலையளவு குறுகிப் பின் வாங்கிமறைந்தன.

சட்டென்று மார்பில் யாரோ கைவைத்தார்கள்.

தினகரன் திடுமென்று விழித்துக் கொண்டான்.

''என்ன ஆச்சப்பா... ராஜா... என்ன ஆச்சப்பா...?'' என்று அப்பா மார்பை வருடி விட்டுக் கொண்டிருந்தார்.

''கெட்ட கனவா ராஜா...?'' என்றார் மார்பு நீவலை நிறுத்தாமல்.

''ஆமாப்பா...'' என்றான். மார்பின்மீது ஓடிய கையைப் பற்றி மெதுவாய் விலக்கினான். எழுந்து உட்கார்ந்து கொண்டான். கூடத்தில் மங்கலான விளக்கு தான். பவானி சுருட்டிக் கொண்டு படுத்திருந்தது. முட்டிக் கால் வரை வந்து நின்று போகும் கவுன், சந்தனத் தொடைக்கு மேலே ஏறிப் போயிருந்தது. பச்சையில் சிவப்பும்வெள்ளையுமாகக் கோடிட்ட ஜட்டியும், அதன் பிரம்ம முடிச்சு நாடாவும் தெரிந்தன. அப்பா எழுந்து கொண்டார். கூடத்துச் சுவர் அறையைத் திறந்து சிட்டிகை திருநீற்றை எடுத்து நெற்றியில் இழுத்து விட்டார். உச்சந்தலையில் கொஞ்சம் தூவி விட்டார்.

''ஒரு கிளாஸ் தண்ணி குடி...''

பக்கத்துச் செம்பை எடுத்துத் தண்ணீரைத் தொண்டைக்குள் சரித்துக் கொண்டான்.

''என்ன கனவுப்பா...?''

''ஒண்ணுமில்லேப்பா...'' என்றான். வேறு எதுவும் சொல்லாமல் படுத்துக் கண்களை மூடிக் கொண்டான். அசதியாய்த் தூங்குபவனை அப்பா தொந்தரவு செய்ய மாட்டாரென்ற நம்பிக்கை.

''சரி... சரி... தூங்கு...'' என்றார் அப்பா அவசரமாய். தலையணையை நகர்த்தி அவரும் படுத்துக் கொள்கிற சின்ன சப்தம் கேட்டது.

அம்மா இருந்த வரைக்கும் எல்லோருக்குமே யானை பலம் தான். மற்றவர்களுக்கெப்படியோ, அவனுக்கு ஏதொன்றுக்கும் அம்மாதான்.

'ஏம்மா... என்னை இப்படித் தவிக்க விட்டுட்டுப் போயிட்டே...?' வாயில் வார்த்தை பிரியவில்லை. தன்னிச்சையாய்க் கண்ணிலிருந்து நீர் பிரிந்து தலையணைக்குள் இறங்கியது.

---

ஒவ்வொரு ஆண்டும் குஜராத்தில் உள்ள கண் பார்வை அற்ற பள்ளி-கல்லூரி மாணவர்களுக்காக இங்குள்ள பார்வையற்றோர் சங்கம் கிரிக்கெட் போட்டி நடத்துகிறது. இதில் வெற்றி பெற்ற குழுவிற்கு ''விஜய் மர்சண்ட்'' கோப்பை பரிசாக அளிக்கப்படுகிறது. இந்த ஆண்டு 'வஸ்த்ராபூரி'லுள்ள பள்ளி மைதானத்தில் மூன்று நாள் நடைபெற்றது. இதில் 13 குழுக்கள் போட்டியிட்டன. 'நவ்ரங்புரா' (ஆமதபாத்) அணி 'விஜய் மர்ச்சண்ட்' கோப்பையை வென்றது. இந்த 13 குழுக்களிலிருந்து சிறப்பாக விளையாடிய ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுத்து இலங்கையிலிருந்து இந்தியா வரவிருக்கும் கண் பார்வை அற்ற குழுவிற்கு எதிராக நடைபெறவிருக்கும் போட்டிகளுக்குப் பயிற்சி தரப்போகிறார்கள்.

—ஆர். பாண்டுரங்கன்.



**கா**லையில் இந்தரைக் கெல்லாம் அப்பா எழுப்பி விட்டார்.

''ஆஃபீஸுக்குச் சீக்கிரம் போகணும்னியே ராஜா...''

ஏற்கெனவே பவானி எழுந்து பல் தேய்த்து விட்டு, அதிகாலைக்கென்ற சுருதி சேராத குரலில் சத்தம் போட்டு, 'இ. மு. ஆயிரத்தெழாம் ஆண்டு, இ. மு. ஆயிரத்தெழாம் ஆண்டு...' என்று நெட்டுரு பண்ண ஆரம்பித்திருந்தாள். அரக்கப் பரக்க எழுந்தான். பல்லை விளக்கி விட்டு, ஒரு காஃபி போட்டுக் குடித்து விட்டு, அப்பாவுக்குக் கொடுத்து விட்டு உலைநீரை அடுப்பில் ஏற்றினன்..

அரிசியைக் களைந்து, கழுவின நீரை விரல்களின் இரண்டு வழியாக வழிய விட்டான்.

அப்பா 'லொடக், 'லொடக்' என்று செத்துக் கொண்டிருந்த குழாயை உயிர்ப்பித்து அடிக்க ஆரம்பித்தார்.

அம்மா இருந்த வரையில் எல்லா வேலைகளும் அம்மாவின் தலையில் தான். அவன் எழுந்திருக்கிற போதே காஃபி தயாராயிருக்கும். சாதப்பானை கவிழ்த்து வைக்கப்பட்டிருக்க, கஞ்சி அடுத்த பாத்திரத்தில் வடிந்து கொண்டிருக்கும். இட்லியோ, தோசையோ அடுப்பில் தயாராகிக் கொண்டிருக்கும்.

அப்பொழுதெல்லாம் அப்பா ராஜாங்கம் தான் செய்து கொண்டிருப்பார். காஃபிக்கு வெந்நீர் வைக்கக் கூட அவருக்குத் தெரியாது. காலையில் எழுந்து கொள்ளத் தெரியும். கண்ணை ஓட்டி ஓட்டி ஒரு மணிநேரம் பேப்பரைப் பார்க்கத் தெரியும். குளித்தவுடன் கஞ்சி மடிப்போடு இருக்கும் வேஷ்டியை எடுத்துக் கட்டிக் கொள்ளத் தெரியும். இரண்டு நாழிகை நேரம் துளசியும், மல்லியுமாய் அள்ளி அள்ளிப் போட்டு வாய் முணுமுணுக்கத் தெரியும். சாப்பிட்டபிறகு மூப்பாட்டன் காலத்து சைக்கிள் எடுத்து வைத்துத் துடைத்து விட்டு அதன்மேல் ஆரோகணித்துக் கடைக்குப் போகத் தெரியும். கடை ஒன்றும் பிரமாதக் கடையில்லை. கட்பீஸ் வியாபாரம். அதில் முக்கால் கடன்.

சரக்குக் கொடுத்தவன் வந்து அவர் மென்னியைப் பிடிப்பான். அப்பா அம்மா மென்னியைப் பிடிப்பார். அம்மா கழுத்துச் சங்கிலியைக் கழற்றிக் கொடுப்பாள். கை வளையலை நீவிநீவி எடுப்பாள்.

'அப்பா, இன்னிக்குக் காலேஜுக்கு ஃபீஸ் கட்டணும்ப்பா...'

அப்பா தலையை அசைப்பதோடு சரி. கடைசியில் அம்மா தான் அப்பா போன பின்னால் அவனிடம் வருவாள்.

'எவ்வளவுடா ராஜா...?'

'நூத்தி அறுவத்தி நாலு ரூபாம்மா...''

''இரு வரேன்...'' என்று உள்ளே போவாள். காலும் அரையுமாய் மிச்சம் பிடித்ததை நோட்டாய் மாற்றிக்கொண்டு வந்து அவன் உள்ளங்கையில் திணிப்பாள்.

நேற்றிரவிலிருந்தே அம்மாவின் நினைவு மறுபடியும் மறுபடியும் விடாமல் வந்து மோதிக் கொண்டிருந்தது.

அந்தக் கனவை அப்பாவிடம் சொல்லலாமா...?

சொன்னால் 'கெட்ட கனா...' என்றுபுறங் கையால் ஒதுக்கி விட்டுத்தான் போவார்.

என்ன கனவு அது? அதற்கு அர்த்தம் என்ன? இந்த ஒரு வாரத்தில் பாதிக் கனவில் திடுக்கிட்டு நான்கு முறையாவது எழுந்திருப்பான். அந்த நாயும், பூனையும், பல்லிவாலும் மறுபடியும் மறுபடியும் ஏன் சுற்றிச் சுற்றி வருகின்றன? இந்த மூன்று மாதத்தில் முப்பது முறையாவது அதே கனவு...

''ராஜா... அந்த அமராவதி வீட்டு லேர்ந்து ஆளு வந்திருந்தது... இந்த ஞாயிற்றுக்கிழமை கூட நாள் நல்லாருக்கு. பையனை வந்து பொண்ணைப் பாத்துட்டுப் போகச் சொல்லுறாங்க...''

''அம்மா செத்து மூணு மாசம் கூட ஆகலியேப்பா... அதுக்குள்ள ஏன் கல்யாணத்தைப் பத்திப் பேச என்ன அவசரம்...?''

''ஆம்பிளைப் பிள்ளை நீயே சமைச்சுக் கிட்டு ஆபீஸுக்கும் போக வேண்டியிருக்குது... அம்மா இருந்திருந்தா இந்நேரம் கல்யாணமே முடிஞ்சிருக்கும்...அவ பாத்துச் சொன்ன இடம் தான ராஜா...''

நிஜம் தான். அமராவதியைப் பத்தி அம்மா அவனிடம் ஏற்கெனவே பிரஸ்தாபித்திருந்தாள்.

'பொண்ணு கேட்டை நட்சத்திரம்... கேட்டையில பொறந்ததுக்கு மூத்த பையனு பாத்துக் குடுக்கணும்முன்னு சொல்லுவாங்க... பொண்ணும் கிளி மாதிரி இருக்கா...''

கருத்து: டால்ரிக்ஸ்




அம்மா செத்துப் போன துக்கம் இன்னும் ஈரம் உலராமல் இருக்கும் போது சுய சந்தோஷத்தில் ஈடுபட மனசு எப்படிச் சம்மதிக்கும்?

'ஒனக்கு அஞ்சு வருஷம் வரைக்கும் பால் கொடுத்திருக்கேன்டா...'

'பொய் சொல்றேம்மா...

'அட நெஜம்மாத்தான்... வளர்ந்த கன்னுக்குட்டி மாதிரில்ல முட்டுவ... அப்புறம் வேப்பிலை எண்ணெய், சீயக்காய்த் தூள் அது இதுன்னு கண்டதையெல்லாம் காம்புல தடவித்தான நீ வுட்டு ஓட்டம் பிடிச்சே...'

அம்மா இன்னும் நான்கு பெண்கள் சபையில் இருக்கும் போதே அவனை வைத்துக் கொண்டு சொல்வாள். அண்டை அயல் பெண்கள் அத்தனை பேரும் லஜ்ஜை கலந்த எள்ளலோடு அவனைப் பார்ப்பார்கள். அவனுக்கு வெட்கமாய் இருக்காது. எதற்கு வெட்கப்பட வேண்டும்? அத்தனை பேருக்கும் நடுவில் அம்மா மடியில் படுத்துக் கொள்வான். பதினெட்டு வருஷம் இடைவெளி விட்டுத்தான் பவானியைப் பெற்றுக்கொண்டாள்.

'கடைசியா முளைச்ச பல்லி வாலு...' என்று பவானியைப் பற்றிப் பேசுகிற போதெல்லாம் கிண்டலாய்ச் சொல்லிக் கொள்வாள்.

''என்ன சொல்ற ராஜா...?''

மறுபடியும் அப்பா.

''உங்க இஷ்டம்ப்பா...''

''அப்ப சரின்னு சொல்லிடவா...?''

அப்பாவின் முகத்தில் பொங்குகிற சந்தோஷத்தை வாய் புன்னகையாய் விரித்தது.

ஞாயிற்றுக்கிழமை பெண் பார்க்கக் கிளம்புமுன், குளித்து விட்டுச் சுவாமி அறைக்குள் நுழைந்தான். அகல் திரியைத் திரித்துப் பிசுக்கெடுத்தான். எண்ணெய் வற்றியிருந்தது. ஊற்றினான். தீக்குச்சியைக் கிழித்து அதைப் பற்ற வைத்தான்.

அம்மாவின் படத்திற்கு நமஸ்கரித்தான்.

அம்மா அவன் வயதாய் இருந்தபோது எடுத்த படம். 'நீ அஞ்சு மாசன்டா' என்பாள் புன்சிரிப்புடன். அதே சிரிப்புதான் படத்திலும் விலகாமல் இருந்தது. சாகிற போதும், மயானத்தில் நெருப்பு வைத்துச் சுட்ட போதும் அதே புன்சிரிப்பு தான் இருந்தது. சாகும் போது கூட அவள் இருபத்தைந்தில் இருந்த மாதிரி தான் இருந்தாள்.

அம்மா சொன்ன மாதிரி அமராவதி அழகாகவே இருந்தாள். நாற்பது நாளிலேயே அவள் கழுத்தில் தாலி ஏறியது.

மல்லிகையும், கதம்பமும், சந்தனமும், அத்தரும் அவள் கூடவே இழைந்து வர 'ணக்' 'ணக்' என்ற மெட்டி ஒலியுடன் ராத்திரி அவள் அவர்களின் அறைக்குள் நுழைந்தபோது —

அந்தரத்து அம்புலி அறைக்குள்வந்தது.

தினகரனுக்கு அம்மாவும், கனவுகளும் அன்றோடு அற்றுப் போயின.

# வாலிபரான உங்களின் உரிமை



## குறைந்த விலைக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் வாங்குவது

விரைவில் உங்களை நம்பிச் சார்ந்திருப்பவர் ஏற்படுவர்—நீங்கள் திருமணம் செய்து கொள்வீர்கள், மக்கள் செல்வம் பெருகும். அவர்களின் பாதுகாப்பிற்காக நீங்கள் ஒரு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசி எடுக்க வேண்டியிருக்கும். அதைச் சீக்கிரம் செய்யுங்கள். பணத்தைக் குறைத்துக் கட்டுங்கள். (வயது குறைந்தவர்களுக்கு பிரீமியங்கள் குறைவு).

நீங்கள் ஆரோக்கியமாக இருக்கும் இன்றுதான் இன்ஷ்யூர் செய்துகொள்ள சரியான தருணம். ஆரோக்கியமின்மையுடனோ, முதிர்ந்த வயதிலோ இன்ஷ்யூர் செய்து கொண்டால் கூடுதலான பிரீமியங்கள் கட்டவேண்டி வரும். உங்களுடைய எல்ஐஸி முகவர் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசி பற்றியும், தனியார் சேமிப்புத் திட்டங்கள், முதலீடு திட்டங்களைவிட ஆயுள் இன்ஷ்யூரன்ஸில் உள்ள மேம்பாடுகளைப் பற்றியும் விளக்குவார்.

பலவித ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள் உங்கள் தேவைகளுக்கு ஏற்றவாறு உள்ளன—மாற்றக் கூடிய முழு ஆயுள் பாலிசித் திட்டம், என்டோமென்ட் பாலிசித் திட்டம், முழு ஆயுள் திட்டம் போன்றவை. எல்ஐஸி முகவர் சரியான திட்டத்தை நீங்கள் தேர்ந்தெடுக்க உங்களுக்கு உதவுவார். இன்றே அவரைக் கலந்து ஆலோசியுங்கள் அல்லது அருகிலுள்ள எல்ஐஸி அலுவலகத்தை விவரங்களுக்கு அணுகுங்கள்.

Radeus/LIC/13-83 TAM

நாளைய வளரும் தேவைகளுக்கு இன்றே இன்ஷ்யூர் செய்யுங்கள்.

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா**





# பெரிய ஆபத்திலேயிருந்து, இன்டேன் ஆள், எங்கள் வீட்டை எப்படி காப்பாத்தினார் தெரியுமா...












நினைவிருக்கட்டும்—காஸ் வாடையை நுகர்ந்தால், உடனடியாக சிலிண்டர் வால்வு மற்றும் பர்னர் நாபுகளை மூடவும். அனைத்து நெருப்புகளையும் அணைத்து விடவும். மின்சார ஸ்விட்சுகளை தொடாதீர்கள். காஸ் வாடை நிலவினால் உங்கள் விநியோகஸ்தரை உடனே அழைக்கவும்.



**Indane**

இன்டேன் குக்கிங் காஸ்





Shilpi IOC 18/83 TAM

# மரத்துப் போகும் உடம்புகள்



டாக்டர் எல். அப்பாசாமி.

இந்த டாக்டர் அறுத்துத் தையல் போடுகிற சர்ஜன் இல்லை. கன்ஸல்டிங் ரூமில் உட்கார்ந்து கொண்டு, 'நாக்கை நீட்டு, இழுத்து மூச்சு விடு...' என்று கேட்கிறவரும் இல்லை. பிறகு?... 'உடம்பை உணர்விழக்கச் செய்வது' என்னும் அனஸ்தடிக் துறையில் பட்டமேல் படிப்புப் படித்தவர் **டாக்டர் எல். அப்பாசாமி** உருளைக் கிழங்காய் உடம்பின் பகுதிகளை நறுக்கித் தையல் போட வசதியாய் மயக்க நிலை ஊட்டிப் பத்திரமாக உயிரைக் காப்பாற்றித் தருகிற இந்த அனஸ்தடிஸ்ட்டுகளைப் பற்றிப் பெரும்பாலானவர்களுக்குத் தெரியாது. ஆபரேஷன் தியேட்டரில் ஆகட்டும், வெளியே சர்ஜரி முடித்தபின் வார்டில் ஆகட்டும் இவர்களைக் கண்டு கொள்கிறவர்கள் எத்தனை பேர்? அனஸ்தீஷியா டாக்டர்களைப் பலரும், யாரோ ஓர் உதவியாளர், நர்ஸ் என்கிற மாதிரிதான் நினைத்துக் கொள்கிறார்கள்.

டாக்டர் அப்பாசாமியே சொன்ன தகவல் இது... ஒருமுறை, மிகவும் சிக்கலான பிரசவத்துக்காக ஒரு பெண் வந்திருந்தாராம். அனஸ்தீஷியா கொடுத்து ஸிஸேரியன் முறையில் குழந்தையை வெளியே எடுத்தார்களாம். பிரசவத்துக்குப் பின், அந்தப் பெண்ணை வார்டில் பார்க்கப் போனார் அனஸ்தடிஸ்ட். ஆனால், கடமையாற்றச் சென்ற இவரை வார்டிலிருந்த உறவுக்காரர்கள் என்ன, எதற்கு என்று கேட்டார்களாம். டாக்டர், தாமே தம்மை அறிமுகம் செய்து கொண்ட பிறகும் அந்தப் பெண்ணைப் பரிசோதிக்க வேண்டா வெறுப்புடன் தான் சம்மதித்தார்களாம்.

நோயாளிகளுக்கு அனஸ்தட்டிஸ்டின் முக்கியத்துவம் புரிவதில்லை. ஆனால் டாக்டர்கள், சர்ஜன்கள், வட்டாரத்தில் இவர்களின் அவசியம் நன்றாகவே உணரப்படுகிறது. 'என்னுடைய சர்ஜரிக்கு இன்னார் தான் அனஸ்தீஷியா தர வேண்டும்', என்று கேட்கிற பிரபல ஸர்ஜன்கள் உண்டு. அனுபவ முதிர்ச்சி, ஆரவாரமின்மை எல்லாம் தேவைப்படுகிற ஒரு முக்கிய துறை இது.

அனஸ்தீஷியா – என்கிற சொல்லுக்கு என்ன பொருள்? – மருந்துகளைச் செலுத்துவதன் மூலம் வலியையோ, மற்ற வேதனைகளையோ உணர முடியாமல் செய்துவிடல்.

ரத்த நாளங்களின் வழியே பெண்டதால் என்கிற மருந்து உட்செலுத்தப்படுகிறது. உடனே நோயாளிக்குத் தூக்கம் அல்லது மயக்கம் வந்து விடுகிறது. இந்த மயக்கம் மூன்று நிமிஷ நேரம் தான் நீடிக்கும். இந்தக் குறுகிய கால அளவுக்குள் எந்த சர்ஜரியையும் செய்து விட முடியாது. சர்ஜரி முடிவடைகிற வரை நோயாளியை உணர்விழந்தவராக வைத்திருக்க வேண்டும். ஆறுமணி நேரம் கூட சில சர்ஜரிகளுக்கு ஆகும். அப்போதெல்லாம் நோயாளிகளின் உயிர் அனெஸ்தடிஸ்ட் கையில்.

நுரையீரலுக்குப் போக வேண்டிய பிராண வாயுவுடன் நைட்ரஸ் ஆக்சைடு.

○ மிக நவீனமான அனஸ்தீஷியா கருவியைப் பயன்படுத்தி நோயாளியின் உடலை மரத்துப்போகச் செய்யும் அனஸ்தடிஸ்ட்.

தசைகளைத் தளர்த்துவதற்காகச் சில மருந்துகள் இவற்றைக் கலந்து, ஒரு பிளாஸ்டிக் ட்யூப் மூலம் நேரடியாக மூச்சுக்குழாயில் செருகிச் செலுத்துவார்கள். நோயாளிகளுக்கு மயக்க ஊசி போடப்படுகிறவரை தான் தெரியும். வாயைத் திறந்து குழாயைத் தொண்டை, வழியே செருகுவது, அனஸ்தீஷியாக் கலவையை உட்செலுத்துவது இவையெல்லாம் தெரியாது...

சர்ஜரிக்குத் தேவையான காலம் முழுவதும் இந்தக் கலவை உள்ளே போய்க் கொண்டே இருக்கும். சர்ஜரி முடிந்து ஆபரேஷன் தியேட்டரை விட்டு நோயாளியை வார்டுக்குக் கொண்டு போகிறவரை விழிப்பாக இருந்து நோயாளியின் நாடித் துடிப்பை, இரத்த அழுத்தத்தை எல்லாவற்றையும் கண்காணிக்கிறவர் அனஸ்தடிஸ்ட் தான்.

அண்மையில், ஒரு பொது மருத்துவமனையில் ஏற்பட்ட அனுபவத்தை வைத்தே டாக்டரைக் கேட்டோம். சின்ன சர்ஜரி தான். ''அனஸ்தீஷியா தர்ர டாக்டர் வந்து கேட்பாரு... கேட்டா... ப்ளட், யூரின் எல்லாம் டெஸ்ட் பண்ணியாச்சுன்னு சொல்லிடு...'' என்று நோயாளியிடம் சொல்லப்பட்டது... நோயாளியும் விவரம் புரியாதவராய் இருந்ததால், வார்டில் இருந்தவர்கள் சொன்னபடி கூற நேர்ந்தது.

டாக்டர் அப்பாசாமி, இந்த நிலை தவறானது என்று சுட்டிக் காட்டுகிறார். என்னென்ன சோதனைகள் உண்டோ அவ்வளவையும் செய்து முடித்த பின்னரே அனஸ்தீஷியாக்கு நோயாளியை உட்படுத்த வேண்டும். அலட்சியம், சோம்பல் காரணமாக இதுபோல் நடப்பது மோசமான விளைவுகளை ஏற்படுத்தும். இரத்தத்தில் சர்க்கரைப் பொருள் அதிகமாக உள்ளதா, சிறுநீரகம் சரிவர இயங்குகிறதா, ஹீமோக்ளோபின் சரியாக இருக்கிறதா என்றெல்லாம் அனஸ்தடிஸ்ட் கவனிக்க வேண்டும். நாற்பத்தைந்து வயதுக்குமேல் ஆனவர்களாக இருந்தால் இ. ஸி. ஜி. சோதனை அவசியம்.

---

ஒருவர்: உங்க இரண்டு பெண்களுக்கும் தனவதி, குணவதி என்று பெயர் வைத்துள்ளீர்களே! மூன்றாவது பெண்ணுக்கு என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள்?

மற்றவர்: 'தலைவிதி'ன்னு.

—எஸ். மாரியப்பன்.



நோயாளியின் பங்கும் ஒத்துழைப்பும் மிக அவசியமானது. முன்னால் எப்போதாவது அனஸ்தீஷியா தரப்பட்டுள்ளதா, அப்போது ஏற்பட்ட விளைவுகள் என்ன என்பதை நோயாளி ஒளிவு மறைவு இன்றிக் கூறவேண்டும். மஞ்சள் காமாலை வந்ததா, ஆஸ்த்மா நோய் உண்டா என்பதையெல்லாமும் சொல்லிவிட வேண்டும். மஞ்சட் காமாலை நோய் குணமடைந்து மூன்று மாதம் ஆகாமல் அனஸ்தீஷியா தருவதில்லை. படபடப்பு, நெஞ்சில் வலி, நடந்தால் மூச்சு இறைப்பது எல்லாமே சொல்லி விட வேண்டும். பல் கட்டிக் கொண்டிருப்பார்கள். இதைக் கூட முன்னாலேயே சொல்லிவிட வேண்டும். கவனமாக இருக்க உதவும். இல்லாவிட்டால், பிளாஸ்டிக் குழாயை மூச்சுக் குழாயில் செருகும்போது பல் கழன்று உள்ளே போய் விடும் ஆபத்து உண்டு. சில மருந்துகள் — பென்ஸிலின்போல் ஒவ்வாதவையாக — (அலர்ஜிக்) இருக்கலாம். இந்த விவரமும் முன்கூட்டியே சொல்லி விடுவது நல்லது. போதை மருந்துகளுக்குப் பழக்கப்பட்டவர்கள், சிகரெட் பழக்கமுள்ளவர்கள், விஷயத்தில் அனஸ்தடிஸ்ட் அதிக எச்சரிக்கை எடுக்க வேண்டியதிருக்கும். எனவே இதையெல்லாம் மறைக்கவே கூடாது. அனஸ்தீஷியாவால் ஏதாவது பிரச்சினைகள் ஏற்படுமானால், 'கரெ' பழக்கம் உள்ளவருக்கு மற்றவர்களைவிட ஐந்து மடங்கு அதிகமாய்க் கோளாறுகள் ஏற்படும். போதை பழகியவர்கள் விஷயத்தில், கூடுதலான அளவில் அனஸ்தீஷியாக் கலவை இருக்க வேண்டும். இலேசில் உணர்விழக்க மாட்டார்கள்.

முக்கியமான நிபந்தனையாக, அனஸ்தீஷியா தருவதற்கு முன்னால் வயிறு காலியாக இருக்க வேண்டும். குறிப்பிட்ட நேரத்துக்குப் பின் ஆகாரம் ஏதும் கூடாது என்பர்கள். இதில் டாக்டர் கட்டளையை மீறவேகூடாது.

அனஸ்தீஷியா கொடுப்பதற்காகப் பிளாஸ்டிக் குழாயைத் தொண்டையில் செருகுவதால், உள்ளே செலுத்தப்படுகிற மருந்தால், வாந்தி எடுக்கும் உணர்ச்சி அதிகமாக இருக்கும். இதைத் தவிர்ப்பதற்காகவே உணவுக் கட்டுப்பாடு. குடலைப் புரட்டி வாந்தி எடுக்கிறபோது, தையல் போடப்பட்டுள்ள பகுதிகள் பாதிக்கப்படும். ஆண்களை விடப் பெண்களே அதிகமாக இந்த வாந்தி உணர்வால் பாதிக்கப்படுகிறார்கள். இப்போது, வாந்தி எடுக்கும் உணர்வைக் கட்டுப்படுத்த, பல மருந்துகள் உள்ளன.

டாக்டர் அப்பாசாமி, நோயாளியிடம், 'பசி நன்றாக இருக்கிறதா?' என்று கேட்பார். ஆமாம் என்று பதில் வந்து விட்டால் கவலை இல்லை. (லிவர்) கல்லீரல் ஒழுங்காக இருக்கிறது என்று கண்டு கொள்ளலாம்!'

இந்த முன்னெச்சரிக்கைகள், சோதனைகள் எல்லாம் அவசரக் கேஸ்கள் விஷயத்தில் சாத்தியமில்லை. அட்மிட் ஆகி அரை மணிக்குள் சர்ஜரி செய்தாக வேண்டும் என்கிற நிலையில் பாதுகாப்பு ஏற்பாடுகள் எல்லாவற்றையும் தயாராக வைத்துக் கொண்டு, என்ன நடந்தாலும் சமாளித்தாக வேண்டும் என்கிற தீவிரத்துடன்

செயல்பட வேண்டியதுதான். இத்தகைய நெருக்கடியைச் சமாளிக்கும் பாதுகாப்பு முன்னேற்பாடுகள் ஆபரேஷன் தியேட்டரில் முறைப்படி இருக்கின்றனவா என்று கவனித்துக் கொள்வதும் அனஸ்தீஸியா டாக்டரின் பொறுப்பே. இதயத் துடிப்பைக் கண்காணிக்கிற 'மானிட்டர்கள்' உள்பட இப்போது ஏராளமான கருவிகள் வந்துவிட்டன. பத்து, இருபது ஆண்டுகளுக்கு முன்பெல்லாம் இன்றுள்ள வசதிகளில் நாலில் ஒரு பங்கு வசதி கூடக் கிடையாது. இருபதாண்டுகளுக்கு முற்பட்ட அனுபவம் ஒன்றை நினைவுகூர்கிறார் டாக்டர்:

''நோயாளிக்குக் கால் முதல் கழுத்து வரை செயலிழந்து போய் விட்டது. பாரலிஸிஸ். அவரைக் குணப்படுத்தும் முயற்சியில் டாக்டர்கள் ஈடுபட்டிருந்த நேரத்தில் அனஸ்தடிஸ்டுகளுக்கும் கடினமான வேலை இருந்தது. அனஸ்தீஸியாக் கலவையை, இப்போது போல் ஆட்டோமாடிக் முறையில் உட்செலுத்தும் வசதி அப்போது இருக்கவில்லை. பலூன் மாதிரி காற்றுத் துருத்தியைக் கையினால் அமுக்கி அமுக்கித்தான் நுரையீரலுக்கு ஆக்ஸிஜனை அனுப்பியாக வேண்டும். தினமும் மூன்று அனஸ்தடிஸ்ட்டுகள், இரவு பகல் பாராமல், நோயாளியின் அருகிலேயே முறை வைத்துக் கொண்டு இருந்து, துருத்தியை அமுக்கிக் கொண்டிருந்தார்கள். இப்படிச் செயற்கை முறை சுவாசம் தந்தது ஒருநாள் இரண்டு நாட்கள் அல்ல. பதினைந்து நாட்கள். ''நிஜமாகவே மிகுந்த ஆர்வத்துடன் அந்தப் பணியைச் செய்து நோயாளியைக் குணப்படுத்தினோம்'' என்கிறார் டாக்டர் அப்பாசாமி.

இதுபோல் 'இன்டென்ஸிவ் கார்டியாக் கேர்' என்கிற இருதய நோய்த் தீவிரக் கவனிப்புப் பிரிவிலும் அனஸ்தடிஸ்ட்டுகளின் பணி மகத்தானது. மூச்சு விடுவது தடைப்படுகிறபோது, இருதயம் நின்றுவிடும்போது செயற்கை சுவாசம், அதிர்ச்சி வைத்தியம் என்று இவர்கள் பரபரத்துச் செயல்படுவார்கள்.

பயணம் போகிறோம். கார், பஸ், அல்லது விமானத்தை விட்டு இறங்கியவுடன், அதைப் பத்திரமாகச் செலுத்தி வந்த டிரைவருக்கோ விமானிக்கோ நன்றி சொல்ல வேண்டும் என்று யாரும் நினைப்பதில்லை. அவர்களும் எதிர்பார்ப்பது இல்லை. ஆனால் ஏதாவது கோளாறு ஆகிவிட்டால் ''கேர்லெஸ் டிரைவிங்'' என்று உடனே பழிசுமத்தத் தயங்குவதில்லை! அதே நிலைதான் அனஸ்தடிஸ்ட்டுகளுடையதும்!

பேட்டி, கட்டுரைவடிவம்: **சுப்ர. பாலன்**

---

**'அருள்வாக்கு**

'அறுசுவை என்று சொல்வதில் தித்திப்பு நீங்கலாகப் பாக்கி ஐந்தையும் பகவான் கீதையில் ராஜஸம் என்று சொல்லிவிட்டாரே — உப்பு, புளி, மிளகாய் இல்லாமலே சாப்பிட முடியுமா? துவர்ப்பு உடம்புக்கு நல்லது; கசப்பு ஞானவிருத்தி என்றும் சொல்வதுண்டே' என்றால் இந்த ஐந்திலே எதையும் அதிபாகச் சேர்த்துக் கொள்ளாமல் மிதமாகப் பிரயோஜனப்படுத்த வேண்டுமென்றே பகவான் சொல்வதாக வைத்துக் கொள்ளலாம். ரொம்பவும் ஞான வைராக்யமாகப் போகும்போது உப்பு, புளி, மிளகாயை அடியோடு தள்ளி விடுவதுதான் நல்லதென்றாலும், கீதை ஸாமான்ய மனுஷ்யனையும் அவன் இருக்கிற இடத்திலிருந்தே கொஞ்சம் கொஞ்சமாக உசத்திக்கொண்டு போவதால் உப்பு, புளிப்பு, உறைப்பு, துவர்ப்பு கசப்பு முதலானதுகளை அளவாக மிதமாகச் சேர்த்துக் கொள்வது என்று வைத்துக் கொள்ளலாம். எந்த எக்ஸ்ட்ரீமுக்கும் போகாமல் மத்தியில் மிதமாகப் போவதைத்தான் பகவான் எல்லா விஷயத்திலுமே விதித்து இதே கீதையில் வேறு இடத்தில் பேசியிருக்கிறார். ஒரேயடியாகத் தின்னக் கூடாது; முழுப்பட்டினியும்போடக் கூடாது. ஒரே தூக்கமாய்த் தூங்கக்கூடாது. கொட்டு கொட்டென்று ராப்பூரா முழித்துக் கொண்டும் இருக்கப் படாது. எல்லாக் காரியத்திலேயும் மிதமாயிருக்கணும்; அப்படிப்பட்டவன் தான் யோகியாக முடியும் என்று அங்கே சொல்கிறார். அதையே இங்கேயும் 'அப்ளை' பண்ணி (ஆஹாரத்தின்) அளவில் மிதமாயிருக்கணும் என்ற மாதிரியே, அதன் ருசியிலும் மிதமான உறைப்பு புளிப்பு முதலானவை உள்ளதாக போஜனம் செய்ய வேண்டும் என்று வைத்துக் கொள்ளலாம்.

- ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்



# அருள் சுரக்கும் மருந்தீசுவரர்



⌘ தியாகராசர் கொலு மண்டபம்

சென்னையையடுத்து மகாபலிபுரம் செல்லும் வழியில் அமைந்திருக்கும் சிவத்தலம் திருவான்மியூர். இங்கு மருந்தீசுவரர் கோயிலில் எழுபது அடி உயர ராஜகோபுரம் கட்டும் பணி முடிவடைந்து பிப்ரவரி 12-ம் தேதி காஞ்சிப் பெரியவர் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி முன்னிலையில் கும்பாபிஷேகம் நடைபெற இருக்கிறது.

வான்மீகி முனிவர் தங்கியிருந்து வழிபட்டதன் காரணமாக இத்தலத்திற்குத் திருவான்மியூர் என்ற பெயர். காட்டில் மேயச் சென்ற காமதேனு தமது சிவபூஜைக்குக் குறித்தநேரத்தில் வந்து பால் சுரந்துஉதவாததைக் கண்டு கோபம் கொண்ட வசிஷ்ட மகரிஷியால் சபிக்கப்பட்டு காட்டுப் பசுவாக மாறித் திருவான்மியூருக்கு வந்து அங்கு சுவயம்புவாகத் தோன்றிய ஈசனது லிங்கத்தின் மீது தனது மடியினின்று பால் சுரந்து வழிபட்டு வந்தது. அச்சமயம் அருகிலுள்ள சைதை என்ற ஊரை (இந்நாளைய சைதாப்பேட்டை) ஆண்டு வந்த சதயு என்ற அரசன் வேட்டையாட வந்தபோது அக்காட்டுப் பசுவின் மீது அம்பு விடுத்தான். அச்சமயம் பசு தன் குளம்பை சிவலிங்கத்தின் மீதுஇறுத்தி தாண்டிக் குதித்து அரசனது படைகளை அழித்தது.

பசுவின் தெய்வீக சக்தியை உணர்ந்த அரசன், அப்பசு வழிபட்ட ஈசனுக்குக் கோயில் கட்டி, அருகில் மக்கள் பலரைக் குடியேற்றி, நித்ய வழிபாடுகளுக்கு வகை செய்ததாகத் தலபுராணம் கூறுகிறது. பின்னர் அவன் இங்குள்ள மோட்சதாயினி தீர்த்தத்தில் நீராடி மோட்ச கதியடைந்ததாக கதை. இதை ருசுப்படுத்தும் வகையில் குறுக்காகப் பால் வண்ணக் கோடுகள் அமைந்த மருந்தீசரது லிங்கத்தின் மீது குளம்புகளின் வடுகளைக் காணலாம். இக்கதையையடுத்து திருவான்மியூர் ஈசனுக்குப் பால் வண்ணநாதர் என்ற பெயரும் அமைந்தது.

பார்வதி பரமேசுவரன் திருமணத்திற்கு வந்திருந்த கூட்டம் காரணமாக வடபகுதி தாழவே, அதைச் சமப்படுத்த, அகத்திய முனிவரைத் தென் திசை செல்லும்படி ஈசன் ஆணையிட்டார். அதன்படி தெற்கே வந்த அகத்திய முனிவருக்குத் திருவான்மியூரில் ஈசன் தனது திருமணக் கோலக் காட்சியளித்து, வைத்திய சாஸ்திர மருந்துகளின் குணங்களையும் அவை குணப்படுத்தும் நோய்களையும் அவருக்கு உபதேசம் செய்தார். இதன் காரணமாகத்திருவான்மியூர் ஈசனுக்கு மருந்தீசுவரர் என்ற பெயர் வந்ததாகக் கூறப்படுகிறது.

மருந்தீசுவரர் கோயிலின் தல விருட்சமாக விளங்கும் வன்னி மரம் கோயிலின் வடமேற்கு முனையில் உள்ளது. வன்னி மரத்தை வலம் வருவது நவக்கிரக மூர்த்திகளை வலம் வருவதற்கு ஒப்பாகும் என்று காஞ்சிப் பெரியவர்கள் கூறி அருளியதன் காரணமாக இக்கோயிலில் நவக்கிரக மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்படவில்லை. ஈசனது சன்னிதி மேற்கு நோக்கி அமைந்திருப்பது இக்கோயிலின் ஒரு சிறப்பான அம்சமாகும். கோயிலின் கிழக்கு வாசலின் உள்ளே தெற்கு நோக்கி அன்னை திரிபுரசுந்தரி சொக்கநாயகி என்ற பெயரில் வீற்றிருக்கிறாள். தெற்குப் புறத்தில் உத்சவ மூர்த்தியாக விளங்கும் தியாகராசர் சன்னதியும் கொலு மண்டபமும் அமைந்துள்ளன. ஈசன், திருவான்மியூரில் ஆடும் தியாகராசராக விளங்குகிறார். பிரதி பௌர்ணமியன்று இரவில் ஊர்வலமாக வந்து கயிறு கட்டாத தண்டாயத்தின் மீது இருந்து வாத்தியங்கள் முழங்க இருப்பக்கமும் தாழ்ந்து வேகமாக ஆடிப் பவனி வரும் தியாகராசரது பதினெட்டு வகை நடனம் பக்தர்களுக்குக் கண்கொள்ளாக் காட்சி.

உள் பிராகாரத்தின் வடகிழக்கு முனையில் பிரபல சாகித்திய கர்த்தாவான அப்பய்ய திட்சிதர் யோக நிலையில் அமர்ந்திருப்பது இக்கோயிலின் மற்றொரு சிறப்பு அம்சம். தற்

## புதைச்சேற்றில் ஒரு யானை!

உலகமெல்லாம் சுற்றிய 89 வயது இளைஞர் பென் ஆரவியன் பார்மன், வனவிலங்குப் பிரியர்.

ஐந்தாவது முறையாக இந்தியாவுக்கு வந்துள்ளார். ''மீண்டும் இந்தியாவுக்கு வர அவரை ஈர்த்தது என்ன?'' என்று கேட்டதற்கு, ''யானைகள் தான். அவை வியத்தகு மிருகங்கள்'' என்கிறார் பார்மன்.

''குரங்குகளுக்குச் சாமர்த்தியம் இருக்கலாம். ஆனால் யானைகளின் சிந்தனைத் திறன் கிடையாது. டில்லிக்கு அருகே உள்ள ஜேம்ஸ் கார்பெட் சரணாலயத்தில் ஒருமுறை பிரும்மாண்டமான ஆண் யானை ஒன்று புதைச்சேற்றில் அகப்பட்டுக் கொண்டது. உடனே பிற யானைகள் தும்பிக்கையால் ஒன்றை ஒன்று பற்றியபடி சங்கிலித் தொடராக நின்று புதைச் சேற்றில் சிக்கிய யானையை விடுவித்தன. என்ன அறிவாற்றல்!''

மூன்று தலைமுறைகளைக் கண்ட பார்மனுக்கு இயந்திர யுகம் கசப்பையே அளிக்கிறது. ''இயந்திரங்கள் மக்களை மனிதத்தன்மை இழக்கச் செய்கின்றன'' என்கிறார். ஒரு முறை நியூயார்க் ட்ரிப்யூன் பத்திரிகைக்கு இது குறித்து எழுதினார். அதில் அவர் எழுதிய இரு வரிகள் 'மறக்க முடியாத சொற்கள்' என்ற பகுதியில் பிரசுரமாயின. சிந்திக்க வைக்கும் அவ்வரிகள்:



''இயந்திர யுகத்தில் குறையொன்றுமில்லாதிருக்கலாம். ஆனால் புன்னகை புரியக்கூடிய இயந்திரத்தை நான் இதுவரை கண்டதில்லை.''

---

போது புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ள ஐந்தடுக்குடன் கூடிய 70 அடி உயர ராஜகோபுரம் கிழக்கு வாசலில் அமைந்துள்ளது. பஞ்ச வர்ணங்கள் தீட்டப் பெற்ற இக்கோபுரத்தைக் கட்டிய பெருமை திரு. முத்தையா ஸ்தபதியைச் சாரும்.

குறுகிய காலமான ஆறு மாதத்தில் நாலரை லட்ச ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்ட இந்தப்புதிய ராஜகோபுரத்திற்கு ஸ்ரீ சந்திரசேகரேந்திர பக்த கோபுரம் என்ற பெயர் இடப்பட்டுள்ளது.

திருவான்மியூர் மருந்தீசருக்குச் சொந்தமான பல கோடி ரூபாய் பெறுமான சொத்து மனை, வீடுகள், பாசன நிலங்கள் வடிவில் உள்ளன. ஆனால் அவை பெரும்பாலும் நீதிமன்ற வழக்குகளில் சிக்கித் தவிப்பதன் காரணமாக, கோயிலின் வருமானம், ஆண்டொன்றுக்கு சுமார் ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாயாகக் குறைந்து போயிற்று. இத்தொகையும் பெரும்பாலும் கோர்ட் வழக்குகளுக்கே செலவாகி விடுகிறது என்பதைக்கேட்க மனம் வேதனைப்படுகிறது.

கட்டுரை, புகைப்படங்கள்:
-ஜனார்த்தனன்

✕ மருந்தீஸ்வரர் ஆலய விமானம்

# இந்தி அரியாசனம் ஏறியது எப்படி?

மீ. ப. சோமு

விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட தியாகிகளிலே ஒருவர் எல். கிருஷ்ணசாமி பாரதி அவர்கள். ராஜாஜியின் அன்பையும் ஆதரவையும் துய்த்தவர். இப்போது சென்னையிலும் தமது கிராமமான தென்காசியையடுத்த நயினாரகரத்திலுமாக இருந்துவருகிறார், இந்த எண்பதாண்டு இளைஞர்!

சென்னைக்கு வரும்போதெல்லாம் தமது மாலை நேர நடைகளின் போது என் வீட்டுக்கு வருவார் கிருஷ்ணசாமிபாரதி. இரண்டு வாரங்களுக்கு முன்பு அவர் வந்திருந்த போது நமது தேசியமொழியாக இந்தி மொழி எப்படி அரியாசனம் ஏறியது என்ற கதையைப் பற்றிப் பேச்சு எழுந்தது. அவர் சொன்ன சரித்திரத் தகவலை அப்படியே கீழே தருகிறேன்.

காங்கிரஸ் கட்சியின் சார்பிலே தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினர்களுடைய கட்சிக் கூட்டம் டெல்லியில் நடந்தது. அந்த உறுப்பினர்களில் ஒருவரான பாரதியும் இக்கூட்டத்திற்குப் போயிருந்தார். அரசியல் நிர்ணய சபையிலே மொழிப்பிரச்னை குறித்துக் காங்கிரஸ் உறுப்பினர்கள் அனைவரும் ஒரு மனதாக வாக்களிக்கவேண்டும் அல்லவா? எனவே அதை முடிவு செய்வதற்கான கூட்டம் இது! தலைமை வகித்தவர் இந்திய தேசிய காங்கிரஸின் தலைவராக அப்போது இருந்த டாக்டர் பட்டாபி சீதாராமய்யா அவர்கள். இந்தி, ஆங்கிலம் இரண்டுக்குமாக வாதப் பிரதிவாதங்கள் மோதின! உணர்ச்சிகள் உச்சமான ஒரு கட்டத்தை அடைந்தபோது, பிரதமர் நேருஜி கோபமாக எழுந்தார்! ''இப்படியே காரசாரமாக விவாதம் போய்க் கொண்டிருந்தால், இந்த நிலையில் கொலைகள் விழும் என்று தோன்றுகிறது! அந்தக் கோரக்காட்சியை நான் பார்க்க விரும்பவில்லை!'' என்று





சொல்லி, கூட்டத்திலிருந்து வெளியேறி விட்டார். உடனே சத்தியநாராயண சின்ஹா எழுந்து பின்னோடு சென்று, நேருஜியை சாந்தப்படுத்தி மீண்டும்கூட்டத்துக்கு அழைத்து வந்தார்.

இரகசிய வாக்கெடுப்பின் மூலம் முடிவெடுப்பது என்று நேருஜி ஏற்பாடு பண்ணினார். என்ன நேர்ந்தது?

இந்திக்கு ஆதரவாக 44: எதிராக 44! இந்த 88பேர்




தவிர மற்றப் பெரும்பாலான உறுப்பினர்கள் கூட்டத்திற்கு வந்திருக்கவில்லை. வந்திருந்தவர்களிடையே வாக்குக்கள் ஆதரவும் எதிர்ப்பும் சரிசமமாக இருந்தன! எனவே, நேருஜி எழுந்தார்.

''இம்மாதிரியான ஒரு பிரச்னையை இன்னும் அதிகமான உறுப்பினர்கள் கொண்ட கூட்டத்தில் தீர்மானிக்க வேண்டும்!'' என்று சொன்னார். கூட்டம் ஒத்திப் போடப்பட்டது.

சில நாட்கள் கழித்து மீண்டும் அடுத்த கூட்டம் கூடியது! பொறுப்புணர்ச்சியுள்ள(!) நமது தேசப்பிரதிநிதிகளில் 154 பேர்களே கூட்டத்திற்கு வந்தார்கள். இரகசிய வாக்கெடுப்பு நடந்தது. என்ன விந்தை! இந்திக்கு ஆதரவு 77: எதிர்ப்பு 77. மீண்டும் சரிசமம்! கூட்டத்திற்குத் தலைமை வகித்த டாக்டர் பட்டாபி சீதாராமய்யா தமது வாக்கை - (Casting Vote) இந்திக்கு ஆதரவாகக் கொடுத்தார். இந்தி வென்றது!

கட்சிக் கூட்டத்தில் எடுத்த முடிவைப் பின்பற்றியே மன்றத்தின் கூட்டத்தில் கட்சி மரப்புப்படி எல்லா உறுப்பினர்களும் ''ஒரு மனதாய்'' இந்திக்கு ஆதரவாக வாக்களித்தார்கள்.

''இந்தி பெற்ற வெற்றியின் பின்னணி இது! இந்தப் பின்னணியை நேருஜி நன்கு உணர்ந்திருந்த காரணத்தால் இந்திபேசாத மக்கள் விரும்புகிறவரை

இந்தியோடு ஆங்கிலமொழியும் மைய அரசின் அலுவலக மொழியாகத் தொடர்ந்து இருந்து வரும் என்று ஓர் உறுதி மொழியை வழங்கினார்!'' என்று புன்முறுவலோடு கூறினார், அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினராக இருந்த தியாகி எல். கிருஷ்ணசாமி பாரதி.

• • •

டி. வி. யில் சென்ற மாதம் 'ரத்னகுமார்' என்



னும் பழைய திரைப்படத்தைக் காண்பித்தார்கள். பி. யு. சின்னப்பாவின் அழுத்தந்திருத்தமான பாட்டுக்கள் அரச நடையிலே வந்து பல பழைய நினைவுகளைக் கிளறின. இரவெல்லாம் காது முழுவதும் பழைய நாடக மேடைப் பாடல்கள் வந்து வந்து ஒலித்த வண்ணமாகவே இருந்தன!

டி. என். ராஜரத்தினம் பிள்ளை, வீணை தனம்மாள், அரியக்குடி, எம். எஸ். போன்ற அருங்கலைஞர்களின் மாண்புமிக்க இசையை ஆண்டுக்கணக்காகக் கேட்டு அனுபவித்திருப்பது போலவே, பழைமையான சில நாடக மேடைப்பாடல்களிலும் எனக்கு ஒரு மயக்கம் உண்டு.

அந்தக் காலத்து நாடக மேடைப் பாடல்களிலே ஒரு பெரிய சிறப்பு என்னவென்றால், அந்தப் பாடல்களுக்குள் தரமான இசை சுத்தமாக இருப்பதோடு, அந்த இசையின் கலைக்குள்ளேயே நடிப்பின் கலையும் இரண்டறக் கலந்திருக்கும்! அதாவது பாடல்களின் அமைப்பிலே, இசையும் சொல்லும் சேரும் போது அந்த இசையின் சாயலுக்குள் நடிப்பின் சாயலும் இணைந்திருக்கும்! இராக பாவத்தோடு, நடிப்பு பாவமும் சொற்களுக்குள் ஒலிக்கும்!

பிருந்தாவன சாரங்காவில் எஸ். ஜி. கிட்டப்பாவின் 'கோபியர் கொஞ்சும் ரமணா' எப்பேர்ப்பட்ட பாட்டு! கண்ணனோடு நேருக்கு நேர் பேசுகிறது, கொஞ்சுகிறது அந்த இசை! 'உலகம் புகழும் நல்ல உத்தமப் பெண்மணி' என்ற பாட்டைத் தான் பாருங்களேன். வசந்தாவும் சோகினியும், பழைமையான ராகங்கள்தானே? ஆனாலும் அந்த மெட்டுக்குள் எத்தனை சாகசம்! 'பெரியோர் இருக்குமிடம்' என்றநந்தன் சரித்திரப் பாடல் எத்தனையோ முறை கேட்ட சிந்து பைரவிதான். ஆனால் இது கிட்டப்பாவினுடைய சிந்துபைரவி! ஏன், சங்கராபரணத்தையே எடுத்துக்



கொள்ளுங்கள். 'நாளைப் போகாமல்' என்ற பாடலை மேலே கொண்டு போய், அந்த உச்சியில் நின்று கொண்டு, அப்படியே அதிர்வாணங்களை மளமளவென்று உதிர்ப்பாரே கிட்டப்பா, அது எப்பேர்ப்பட்டசங்கராபரணம்! அந்தச் சங்கராபரணத்தைத் தம்மோடு எடுத்துக் கொண்டு உச்சிக்கே போய் விட்டார் அவர்! சுப பந்துவராளி, உசேனி, வராளி, காபி, பேஹாக், ஏன், கல்யாணியே கூட கிட்டப்பாவின் பாட்டிலே தனியானதோர் வடிவில் தனியானதோர் வல்லமையோடு வரும்!

பி. யூ. சின்னப்பா பாடியுள்ள 'பத்தினியே' என்ற ஒரு பழைய பாட்டைக் கேட்டிருப்பீர்கள். சகானா தான். ஆனால் என்ன சகானா போங்கள்! நெஞ்சுக்குள் புகுந்து என்னவோ செய்கிறது அது!

பழைய திரைப்படமான 'மோகினி ருக்மாங்கதா'வில் ஒரு பாட்டு... ''பாதம் நோவலானதேன் பிரபோ' என்று வரும்! சைந்தவி ராகம்! பி. பி. ரங்காச்சாரி பாடியிருக்கிறார் என்று நினைக்கிறேன். அந்த 'ப்ரபோ' என்ற இடத்தில் கொஞ்சம் இறங்கி வந்து சைந்தவி ராகம் பேசுகிற பேச்சு, அடாடா! இதே வரிசையில் வைக்க வேண்டிய இன்னொரு அருமையான பாடல் எம்.கே. தியாகராஜ பாகவதரின் 'மறைவாய்ப் புதைத்த ஓடு'! இந்தப் பாடல்களை எல்லாம் மறக்கவே முடிகிறதில்லை!

நாடகப் பாடல்கள் தவிர தேவார இசைமணி நெல்லை சுந்தர ஓதுவார் மூர்த்திகளின் பக்திப் பாடலும் இப்படித்தான்! அவர் எனக்கு நெருங்கிய உறவினராதலால் மிகச் சிறு வயதிலிருந்தே அவர் பாட்டை நிறையக் கேட்டிருக்கிறேன். திருத்தாண்டகம் பாடுவார், அந்த ஹரிகாம்போதியை நாளெல்லாம் கேட்கலாம். பிள்ளைத் தமிழ் பாடினார் என்றால் பைரவி, சாவேரி, கமாச். இவற்றோடு 'மனோலயம்' என்று ஒரு ராகம் பாடுவார். அந்த மனோலயத்தில் மனம் அப்படியே லயித்த வாறு, தெரு வீதியெல்லாம் அவருடைய தேவாரகோஷ்டியைப் பின் தொடர்ந்து திரள் திரளான மக்கள் வந்து கூடி மனமுருகிக் கேட்பார்கள். சைதாப் பேட்டை காரணீசுவரர் கோவில் வீதி உலாவிலும்! மயிலைக் கபாலி கோவில் வீதி உலாவிலும் அவருடைய பாட்டுக்கு அபாரமான கூட்டம் கூடும்!

நாடா ஒலிப்பதிவுகள் தோன்றாத காலம் அல்லவா அது! எத்தனையோ அற்புதமான சங்கீதம் காற்றோடு காற்றாகப் போய் விட்டது.



✖ அனந்த் வெலங்கராக ஓம்புரி

# பாதி உண்மையின் முழு வடிவம்

**சமீபத்தில் வெளிவந்துள்ள மற்றும் ஒரு வித்தியாசமான திரைப்படம்: அர்த சத்ய. இதன் புகழ் அமெரிக்கா வரை எட்டிநியூஸ் வீக் பத்திரிகையின் 83ம் ஆண்டின் சிறந்த திரைப்படங்கள் பட்டியலில் இடம் பெற்றுத் தந்துள்ளது.**

சினிமாவில் வில்லனும் கதாநாயகனும் கட்டிப்புரளும் காட்சியில் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வரும் போலீஸ்காரர்களையே பார்த்துப் பழகிவிட்டோம். மிஞ்சிப் போனால் அவ்வப்போது ஓரிரு படங்களில் மட்டுமே அமானுஷ்ய நற்குணங்கள் நிரம்பியவர்களாய் அவர்களைப் பார்க்கிறோம். இவற்றிலிருந்து மாறுபட்ட கோணத்தில் போலீஸாரைக் காட்டுகிறது 'அர்த சத்ய' என்ற ஹிந்தி திரைப்படம். ஒரு சப் – இன்ஸ்பெக்டரைச் சாதாரண மனிதனாக, குற்றங்கள் இழைப்பவனாக, சூழ்நிலைகளால் பாதிக்கப்படுபவனாகக் காட்டுகிறது இப்படம். காதல் காட்சிகள், ஆடல் –பாடல், ஆடைக் குறைப்பு போன்ற அனுவசியங்கள் இல்லாத போதும் இப்படத்துக்கு பம்பாயில் அமோக வரவேற்பு – ஒவ்வொரு காட்சியும் 'ஹவுஸ் ஃபுல்'! அர்த சத்யவின் வெற்றி பம்பாய் நகர திரைப்பட மார்க்கெட்டை அதிரச் செய்துள்ளது. வழக்கமான மசாலாப் படங்கள் இதன் முன் அடிபட்டுப் போய் விட்டன.

புகழ் பெற்ற 'ஆக்ரோஷ்' படத்தை இயக்கிய கோவிந்த நிஹலானியே இப்படத்தில் இயக்குனர். கதாநாயகன் அனந்த் வெலங்கர் இளம் வயதில் தந்தைக்கு பயந்து வளர்ந்தவன். அடக்குமுறைகளைப் பிரயோகித்த தந்தைமீதும் அடங்கியே வாழ்ந்து பழகிவிட்ட தன் மீதும் கோபம் பொங்கி வர, அனந்த், அந்தக் கோபத்தையெல்லாம் சிறைக் கைதிகளிடம் காண்பிக்கிறான். அவன் ஒருமுறை ராமா ஷெட்டி என்பவனைக் கொலைக் குற்றத்துக்காக் கைது செய்ய முற்படும்போது மேலிடத்திலிருந்து உடனே அம்முயற்சியைக் கைவிடுமாறு உத்தரவு பிறக்கிறது. வெறுப்பும் மனக்கசப்பும் அடைந்த அனந்த் குடிப்பழக்கத்துக்கு அடிமையாகி, குடி போதையில் ஒரு கைதியை அடித்துக்கொன்று விடுகிறான். சந்தர்ப்பவசத்தால் ஷெட்டியிடமே தஞ்சம் அடைகிறான். அனந்த். ஷெட்டியோ முதலமைச்சரின் சிபாரிசு பெற்றால் தான் அனந்த் பிழைக்க முடியும் என்று கூறி அதைப் பெற்றுத் தர ஒரு விலையும் பேசுகிறான். அளவு கடந்த

✖ கோபவெறி கொண்ட அனந்த்





ஆத்திரம் பொங்க அவன் கழுத்தைத் நெறித்துக் கொன்று விட்டு மேலதிகாரிகளிடம் சரணடைகிறான் அனந்த்.

படம் முடிவுறும் போது விடுபட முடியாத சக்ரவியூகத்தினுள் சிக்கிய அனந்த்திடம் பரிவும் பரிதாபமுமே கொள்ளத் தோன்றுகிறது. சந்தர்ப்பமும் சூழ்நிலையும் ஒரு நல்ல மனிதன் கெட்டுப் போக எவ்வளவு தூரம் காரணமாயிருக்கின்றன என்று புரிகிறது.

மகாராஷ்டிர போலீசார் இப்படத்துக்கு பெரும் எதிர்ப்புத் தெரிவித்தனர். ஒரு போலீஸ் சிப்பந்தியைக் கேவலமாய்க் காட்டும் இப்படத்தை மேலும் தணிக்கை செய்யுமாறு முறையிட்டனர். மாநில அரசு இம்முறையீட்டை மத்தியத் திரைப்படத் துறைக்குத் தெரிவித்தது. ஏற்கெனவே தணிக்கை செய்யப்பட்ட இப்படம் வெட்டுப்படாமல் தப்பியதற்குக் காரணம் காவல் துறையின் ஒருபகுதியினர் வெகு இயற்கையான சம்பவங்கள்கொண்ட இதனை வியந்து பாராட்டியமைதான்.

பம்பாய் போலீஸ் கமிஷனர் திரு. ஜூலியோ ரொபெய்ரோ 'அர்த சத்ய'வைப் புகழ்ந்து பாராட்டினார்: ''ஒரு போலீஸ்காரனை பிற மனிதர்களைப் போல மனிதனாக— உயர்வு தாழ்வுகள் உடையவனாகக் காண்பித்துள்ளார்கள்.''

ஆனால் துணை கமிஷனர் பட்வர்த்தன் இப்படத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ளார். போலீஸாரைப்பற்றி மிகத் தவறான எண்ணத்தை இது ஏற்படுத்துவதாகவும் பம்பாய் நகரப் போலீஸாருக்கு மாபெரும் அநீதி இழைக்கப்பட்டுள்ளதாகவும் கூறியுள்ளார்.

தொழில் நுட்ப ரீதியில் இப்படத்தில் புதுமை ஒன்றும் இல்லை. ஆனால் அரசியல், சமூகப் பின்னணியில் பார்க்கும்போது இது ஒரு புரட்சிகரமான படம். இது போன்ற வேறு பல படங்களை எடுக்க வேண்டும் என்ற எண்ணம் தயாரிப்பாளர்களிடையே தோன்றி அவர்கள் இயக்குனர் நிஹலானியை அணுகிய வண்ணம் இருக்கிறார்கள்.

கோவிந்த் நிஹலானியோ சலனமின்றிக் காணப்படுகிறார். படத்தின் வெற்றி துளியும் அவரைப் பாதிக்கவில்லை. சுமார் பத்து வருடங்களாய் ஷ்யாம் பெனகலின் காமிராமானாகப் பணியாற்றிய இவர் இனி அரைகுறை உண்மைகளை விட்டு முழு உண்மைகளைப் படமாக்க விரும்புவதாகக் கூறுகிறார்.

''சிலர் நான் காவல் படைக்குப் பரிந்து பேசுவதாய் எண்ணுகின்றனர். அதுவல்ல என் நோக்கம். போலீஸாரை எப்போதும் வெறுப்புடன் அணுகுவது சரியல்ல. இப்படம் பொறுப்பான பதவியிலுள்ள ஒருவனுக்கு ஏற்படும் அவமானங்கள் அவனை எவ்வாறு பாதிக்கின்றன என்று காட்டுகிறது. வேலையில் சிறக்க விரும்பும் ஒருவன் மனச்சாட்சியைப் பணயம் வைக்க வேண்டும் என்று உணரும் போது ஏற்படும் போராட்டத்தை விவரிக்கிறது. இப்படம் பிரபலமாகக் காரணம் ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்க்கையில் இத்தகைய சிக்கல்களைச் சந்திப்பதுதான்.''

ஆதாரம்: ஸண்டே

தமிழ் வடிவம்: சிதாரவி

× இயக்குனர் கோவிந்த் நிஹலானி



O எம்.ஜே.புகாரீன், சிதம்பரம்.
? ஹெக்டே பற்றி உங்கள் கருத்து?
! பூரண மெஜாரிட்டியுடன் ஒரு முதல்வர் சாதனைகள் புரிவதற்கும் சிறுபான்மைக் கட்சியாக இருந்தும் இதர சில கட்சிகளின் ஒத்துழைப்பைக் கோரிப் பெற்று பலத்த எதிர்ப்புகளைச் சமாளித்து வெற்றிகளை அடைவதற்கும் வித்தியாசம் உண்டு. முதலாவது குற்றாலம் மலை ஏறுவது போன்றது. இரண்டாவது எவரெஸ்ட் சிகரத்தில் ஏறுவது போன்றது.

O வி.சௌரிராஜன், ஸ்ரீரங்கம்.
? சிவாஜிகணேசன் சினிமாத் துறையில் பெற்ற வெற்றியில் பாதி அளவு கூட அரசியலில் பெற முடியாது போனது ஏன்?
! ஒன்று ஒவர் ஆக்ஷன் மற்றது ஒவர் ரி-ஆக்ஷன்.

O வி. கோபிநாத், லெட்சுமாங்குடி.
? நான் காந்தி அல்ல படத்துக்குப் பெயர் மாற்றம் தேவையா?
! தேவை என உணர்ந்து ஆட்சேபணை எழுந்ததுமே அதற்கு மதிப்பளித்து விட்டுக் கொடுத்தது பெருந்தன்மை.

O கி. நடராஜன், ஆயக்காரன்புலம்.
? ஒரு வயது பூர்த்தியாகும் ஓம்சக்தி பற்றி?
! பகீரதனுடைய தவத்தின் பயன்; பொன்னாச்சி மகாலிங்கத்தின் செல்வம்அதற்குடானிக்; கனமான அம்சங்களை வரவேற்கும் வாசகர்களுக்குச் செல்லப்பாப்பா.

O பி.எஸ். ராகவேந்திரராவ், வளவனூர்.
? குன்னக்குடி வைத்தியநாதன் தமது வயலின் இசையால் தமது தந்தை உயிரைக் காப்பாற்றினாராமே! ஆச்சர்யமாயில்லை?
! ரொம்ப, ரொம்ப, ரொம்ப!

O ஸ்ரீராகவராஜ், சேலம்.
? குஜராத்தி எழுத்தாளர் சுரேஷ் ஜோஷியின் செயலைக் கண்டு என்ன நினைக்கிறீர்கள்?
! பேசாமல் பரிசைப் பெற்றுக் கொண்டு ஏதேனும் நல்ல காரியத்துக்குப் பணத்தைப் பயன்படுத்தியிருக்கலாம். திருப்பித் தந்ததால் சாகித்திய அகாதமி திருந்தி விடப் போவதில்லை. தம்முடைய எழுத்திலேயே நம்பிக்கை இல்லாத இவருக்கு இந்தச் செயலால் புகழ் கிடைத்து விடப் போவதுமில்லை.

O எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.
? அலாவுதீனின் அற்புத விளக்கு உங்களிடம் கிடைத்தால் என்ன செய்வீர்கள்?
! விளக்கோ, பல்போ எதுவானாலும் சரி, மூன்று வரங்கள் கேட்பேன். தமிழ் நாடக மேடை பக்கம் தலைக்காட்டாதே! டி.வி. நிலையத்துக்குள் நுழையாதே! கிரேஸி மோகன் கிட்டத்தில் நெருங்காதே!

O நல்லாலம் காசிநாதன், கீழ் சாத்தமங்கலம்.
? குடிப்பவர்கள் சாராயக் கடை இருப்பதால் குடிப்பதாகக் கூறுகிறார்கள். கடைக்காரரோ குடிப்பவர் இருப்பதால்தான் கடை வைத்திருக்கிறேன் என்கிறார். இதில் எது சரி?
! கேள்வி நீங்கள் கேட்டதால் நான் பதில் சொல்கிறேனா நான் பதில் சொல்வதால் நீங்கள் கேள்வி கேட்கிறீர்களா என்று யோசியுங்கள். உங்கள் கேள்விக்குப் பதில் கிடைத்துவிடும்.

O வி. பழனி, பாண்டிச்சேரி.
? எம். ஜி. ஆர். இரண்டு கறுப்புக் கண்ணாடி - முகத்தில் ஒன்று, கையில் ஒன்று வைத்திருக்கிறாரே? எதற்கு?
! ஒன்று பார்க்க; மற்றது படிக்க.

# அரசியல் நாகரிகம்

O [illegible] ஸ்டைல்



O துணிவான ஸ்டைல்



O சூரி



O க. தியாகராசன், நெல்வேலி.
? குடியரசு காலத்திலும் அரசியலுக்கு வாரிசு தேவையா?
! தேவைதான். ஆனால் அது உருவாக வேண்டும் உருவாக்கப்படக் கூடாது.

O மோ. க. இரத்தினசாமி, மோகனூர்.
? இலவச வேட்டி சேலை, மீன் வாரிய ஊழியருக்கு இனாம், புலவர்களுக்கு உதவித் தொகை, இலவச சத்துணவு பல்பொடி...... முதல்வர் எங்கே சென்று கொண்டிருக்கிறார்....?
! சோம்பல் சாம்ராஜ்யத்தை நோக்கி!

O தங்கதுரை, ராமகுண்டம்.
? முதல்வர்நிவாரண நிதிக்குக் கட்டாய நன்கொடை வசூலிப்பது எதைக் காட்டுகிறது?
! மாநிலப் பொருளாதாரத்தின் மோசமான

நிலைமை. கட்டாய நன்கொடை என்பது நன்கொடை என்ற சொல்லையே அசிங்கப்படுத்துகிறது; அர்த்தமற்றதாக்குகிறது. அது அபரிமித வரி விதிப்பைவிடக் கொடூரமானது. மிரட்டிப் பகல்கொள்ளை அடிப்பதைப் போன்றது.

○ ஆர். அப்துல்கலாம், திருச்சி.
? குமரி அனந்தன் காரில் தீப்பற்றியதற்கு நீதி விசாரணை நடக்க வேண்டும் என செழியன் கூறியுள்ளாரே?
! குமரி அனந்தனிடம் என்னென்னவோ எதிர்பார்த்து ஏமாற்றமடையும் அவர் அன்பர்களின் வயிறு பற்றி எரிகிறது.. முதலில் அதற்கு நடக்கட்டும் ஒரு ஆத்ம விசாரணை.

○ எஸ். சம்பக்குமார், சென்னை 5.
? அரசியல் நாகரிகம் என்றால் என்ன?



○ ஹிஹி



○ புன்னகை



○ கணுக்

## என்றால் என்ன?

! 1984-ம் ஆண்டின் அளவுகோல்படி விமான உபசாரிணைப் பெண்ணிடம் எம். எல். ஏ. குடித்து விட்டுத் தகாத முறையில் நடந்துகொள்வதும், ரயிலின் ஏ. வி. வருப்பில் அமைச்சரும் எதிர்க்கட்சித் தலைவரும் கூபே கம்பார்ட்மெண்ட்டுக்காகச் சண்டை போட்டு ரயிலைத் தாமதப்படுத்தி ஆயிரக்கணக்கான பயணிகளை அவதிக்குள்ளாக்குவதும்தான்!

○ கே. சுவாமிநாதன், பங்களூர்.
? தற்போது தமிழில் நகைச்சுவையுடன் எழுதும் எழுத்தாளர்களில் தங்களைக் கவர்ந்தவர்களைப் பற்றிச் சொல்லுங்களேன்...?
! புன்னகை — ஜே. எஸ். ராகவன் ஏலியஸ் ஜம்புநாத்; கணுக் — சாருகேசி அல்லது சித்தார்த்; ஹிஹி — கடுகு. அகஸ்தியன், பி. எஸ். ஆர்.. எட்செட்ரா; குபீர் — தராஜா. முகுந்தன். எஸ். வி. ஆர். எனப்படுகிற வரதராஜன்; துணிவான ஸடயருக்கு — செம்பியனு விய வி. ராஜேந்திரன்; குடும்ப ஸடயருக்கு — மெரினா... பட்டியல் போட்டு ஆவது என்ன... அடிக்கடி எழுத மாட்டேன்றுங்களே! என்ன கேட்டீர்கள், ரா. கி. ரவா? அவர் குமுதத்தின் பாக்கியம்!

○ வசந்தா பார்த்தசாரதி, ஆதம்பாக்கம்.
? எம். ஜி. ஆரின் வாரிசு பாக்கியராஜ் என்றால் ஜெயலலிதாவின் கதி?
! அதோகதியாக அனுமதிக்க மாட்டார் புரட்சித் தலைவர். பாக்கியராஜ் அ. தி. மு. க. அரசியலில் நுழைந்தால் ஜெயலலிதாவை விரும்பாத அணிக்குக் குஷியாக இருக்கும். ஆனால் அத்தகைய விஷப்பரீட்சையில் எம். ஜி. ஆர். இறங்க மாட்டார். திரை உலகில் பாக்கியராஜுக்கு இன்றுள்ள அபரிமித செல்வாக்கைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்வது ஒன்றே இன்று எம். ஜி. ஆரின் நோக்கம்.

○ எம். ராஜேந்திரன், லால்குடி.
? சிவாஜிகணேசனுக்கு பத்மபூஷண் விருது பெருமை அளிக்குமா?
! மானாவாரியாக அள்ளி வீசப்படும் இத்தகைய விருதுகளால் யாருக்கும் பெருமை இல்லை. ஏற்கெனவே பெருமைகள் குவித்தவர்களுக்கு இந்த விருதுகள் தேவையுமில்லை.

○ என். சண்முகம், உள்ளி★
? ஒரு கணவனின் மரணம் மனைவியைப் பாதிப்பதுபோல் ஒரு மனைவியின் மரணம் கணவனைப் பாதிப்பதில்லையே ஏன்?
! புறக்காரணங்களால் மனைவிக்கு ஏற்படும் பாதிப்புக்கு நமது சமுதாயத்தில் நிலவி வரும் சில மூட நம்பிக்கைகள் சம்பிரதாயங்கள் இவை காரணம். இந்தப் பழக்க வழக்கங்கள் படிப்படியாக மாறி வருகின்றன. அக்காரணங்களால் ஏற்படும் பாதிப்புக்குக் கணவன் — மனைவியிடையே இருந்த அன்பு, காதல் அல்லது வெறுப்பு இவை காரணம். ஒரு திரையுலகப் பெரும் புள்ளியின்வாழ்க்கையை வைத்து வையத்தை அளக்க முற்படாதீர்கள்; மனைவியின் பிரிவைத் தாள முடியாமல் தவித்து உருகும் சிலரை எனக்குத் தெரியும்: உயிரை விட்ட சிலரையும் தெரியும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
என். சண்முகம்,
உள்ளி கிராமம்,
(வழி) வளத்தூர்.
குடியாத்தம் தாலுகா.
வ. ஆ. மாவட்டம் 635 813







# விபத்துக்குப் பின் விபரீதங்கள்

பம்மலில் முகமூடிக் கொள்ளையர் செய்த அட்டூழியம் அங்கு வசிப்பவர்களுக்கு ஒரு பெரிய விபத்து. ஆனால் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கு அரசு மருத்துவமனையில் கிடைத்த உபசாரமும், வசதியும் உடைமைகளைப் பறி கொடுத்ததுடன் தாக்குதலுக்கும் உள்ளானவர்களுக்குக் கிடைக்கவில்லை என்பது விபரீதம்!

சாலையில் விபத்துக்கு ஒருவர் உள்ளாவது விபத்து. அவரை உடனே பக்கத்தில் உள்ள ஈ. எஸ். ஐ. மருத்துவ மனைக்குத் தூக்கிப் போனால், ''இங்கே ஆக்ஸிடென்ட் கேஸ்கள் பார்ப்பதில்லை. ராயப்பேட்டை அல்லது ஜி.எச்சுக்கு அழைத்துப் போங்கள்'' என்று கூறி முதலுதவி கூடத் தராமல் ஒரு வாகன வசதி கூட செய்து தராமல் அனுப்புவது விபரீதம்.

குறுக்கே நிற்பது சிவப்பு நாடாவும் மனிதாபிமானம் தெரியாத விதிமுறைகளும்.

இன்னொரு விபத்தையும் அதையொட்டிய விபரீதங்களையும் பரிதாபங்களையும் விரிவாகவே பார்ப்போம்.

சென்னை, குடிநீர் மற்றும் வடிகால் வாரியத்தின் சிறந்த இஞ்ஜினியர்களில் ஒருவர் பாலசுப்பிரமணியம். வெளிநாடுகளிலிருந்தும் மத்திய அரசிடமிருந்தும் அழைப்பு வந்தும் போகாமல் தமிழகத்துக்கே உழைக்க வேண்டும் என்று கருதி வாழ்ந்தார்.



○ திருமதி, திரு கே. பாலசுப்ரமணியம்

சில நாட்களுக்கு முன் ஓர் இரவு பன்னிரண்டுமணி அளவில் தமது நண்பர் ரங்கநாதன் வீட்டிலிருந்து அவருடைய ஸ்கூட்டரிலேயே தெம்பினார் பாலசுப்பிரமணியம். வேறொரு நண்பரை அவரது வீட்டில் இறக்கி விட்டுவிட்டு அசோக் நகரிலிருந்து அண்ணாநகர் செல்லும் வழியில்....

அசோக் நகர் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து நூறு அடி தூரம் கூட இராது....

நடுச்சாலையில் ஒருபெரிய பள்ளம்... 'ஆ'வென்று வாயைப் பிளந்துகொண்டு.. தெரு விளக்கின் மங்கலான ஒளியில் நிழலைப் போர்த்திக் கொண்டு தான் இருப்பது தெரியாது மறைந்து கிடக்கவும்... திடீரென்று பள்ளத்தில் ஸ்கூட்டர் 'தடால்' என்று விழ... தூக்கி எறியப்பட்ட பாலசுப்பிரமணியம் அந்தக்கணமே நினைவிழந்தார்.

பக்கத்தில் விறகுக்கடை வைத்திருக்கும் சௌந்திர பாண்டியன் சத்தம் கேட்டு ஓடி வந்தார். ஆனால் நல்ல ஆகிருதி உடைய பாலசுப்பிரமணியத்தை அவரால் நகர்த்தக் கூட முடியவில்லை. அந்தப் பக்கம் அதிர்ஷ்டவசமாக வந்த இன்னொருவர் சௌந்தரபாண்டியன் உதவியுடன் விபத்துக்குள்ளானவரை ஆட்டோவில்ஏற்றிக் கொண்டு விஜயா நர்ஸிங் ஹோமுக்குக் கொண்டுசென்றார். 'விபத்து கேஸ்களை நாங்கள் அனுமதிப்பதில்லை'' என்று அவர்கள் மறுத்து விடவும் வேறுவழியின்றி அவர் (ஜி. எச்.) பொது மருத்துவமனைக்குக் கொண்டு சென்றார். அப்போது மணி ஒன்று.

அபாயகரமான நிலையில் அவசரச் சிகிச்சைக்கு அனுமதிக்கப்பட்ட பாலசுப்பிரமணியத்துக்கு ஒரு 'ஏ.டி. எஸ்.' ஊசி தவிர வேறு எந்த மருத்துவ சிகிச்சையும் மறுநாள் காலை ஒன்பதரை மணி வரை அளிக்கப்படவில்லை! இதற்குத் தரப்படும் காரணம்: ''சிகிச்சைக்கு அனுமதி வழங்க

நோயாளியைச் சேர்ந்த யாரும் இல்லை!''

'மருத்துவமனைவிதிமுறைகளின் தலையில் இடி விழ' என்று தோன்றுகிறதல்லவா? பாக்கியையும் கேளுங்கள்!

பாலசுப்பிரமணியத்தின் டைரியில் அவருடைய ஆபீஸ் விலாசம், தொலைபேசி எண், நண்பர்கள் சிலரது தொலைபேசி எண் முதலியவை இருந்திருக்கின்றன. பர்சில் என்ன இருக்கிறது என்று குறிப்பெழுதிவைத்த டாக்டர்கள் நோயாளி வீட்டுக்கோ அல்லது நண்பர்கள் இல்லத்துக்கோ ஃபோன் பண்ணி வரவழைத்திருக்கக் கூடாதா? இதைக் கேட்டால் கிடைத்த பதில்: ''அது எங்கள் வேலை இல்லை!''

டாக்டர்கள் தான் இப்படியென்றால் போலீஸ் இலாக்காவாவது ஒரு போலீஸ்காரரை முக்கியமான மருத்துவமனைகளில் இரவில் இருக்கச் செய்து விபத்து என்றால் தலைமையகத்துக்கும் விபத்துக்கு உள்ளானவரின் இல்லத்துக்கும் தகவல் தெரிவிக்கச் சொல்லக் கூடாதா? அதுவும் கிடையாது!

அன்று இரவு பன்னிரண்டு மணிக்கு மேலானவுடன் திருமதி. பாலசுப்பிரமணியத்தைப் பீதி கவ்வியது. நண்பர்கள் பலர் வீட்டுக்குப் ஃபோன் போட்டும் போலீசுக்கு ஃபோன் செய்தும் தகவல் ஏதும் கிடைக்கவில்லை. காலை ஒன்பது மணிக்குத்தான் அவர் ஜி. எச்.இல் இருப்பதுதெரியவர ஓட்டமாய் ஓடினார்கள். இவர்கள் போய்ச் சிறிது நேரத்துக்கெல்லாம் பாலசுப்பிரமணியத்தை ஆப

காவல்துறையைச் சேர்ந்த சிலரிடம் சாலை விபத்துக்கள் பற்றிப் பேசியபோது கிடைத்த தகவல்கள்:

- சென்னையில் விபத்துக்கள் இல்லாத இடம் ஜன நெரிசலும் வண்டி, வாகனங்களும் நிறைந்த மிண்ட், பிராட்வே. காரணம் சந்தடி அதிகமானதால் வேகம் இல்லை.

- அதிகமான விபத்துக்கள் நிகழும் சாலைகள்: (அ) கார்கள்: வால்டாக்ஸ் ரோடு. பூந்தமல்லி ஹைரோடு, மவுண்ட் ரோடு(ஆ) ஆட்டோரிக்ஷா: புரசவாக்கம் நெடுஞ்சாலை, கதீட்ரல் ரோடு, உஸ்மான் ரோடு. (இ) பாதசாரிகள், சைக்கிள் மாட்டு வண்டிகள்: திருவல்லிக்கேணி ஹைரோடு, திருவள்ளுவர் ஹைரோடு.

- விபத்துக்களுக்கு முக்கிய காரணம்: பாதசாரிகள் நடைபாதையில் செல்லாததும் நடைபாதைகள் நடக்க ஏற்றதாய் இல்லாததும்.

- வாகனங்கள் அனைத்தும் ஒரே சீரான வேகத்தில் செல்லாமல் சைக்கிள், ரிக்ஷா, மாட்டு வண்டி, ஆட்டோ, பஸ், கார்,என்று பலவித வேகங்களில் செல்லும் வாகனங்கள் இருப்பது விபத்துக்கள் நிகழ அனுசரணை.

- அதிகமான மக்களைச் சொர்க்கத்துக்கு அனுப்புவது திருவாளர் லாரிதான். அதற்கு அடுத்த இடம் பல்லவனுக்கு. பிறகு கார், மோட்டார் சைக்கிள், ஆட்டோ என்று இந்த வரிசையில்.

- காவல்துறையில் போக்குவரத்துப் பிரிவில் பணியாற்றுவோரின் எண்ணிக்கை மிகவும் குறைவு. இவர்களிலும் பலர் போலீஸ் வேலை அல்லாத இனங்களில் ஈடுபடுத்தப்படுகின்றனர்.(உ-ம்)தலைவர்களுக்குப் பாதுகாப்பு, பொதுக் கூட்டங்கள், ஊர்வலங்கள் ஆகியவற்றை ஒழுங்குபடுத்துதல் இத்யாதி.

- சாலையில் நிறுவப்படும் அலங்கார வளைவுகளும், கவர்ச்சிப் படங்களுடன் கூடிய போஸ்டர்கள்,பானர்களும் விபத்துக்களுக்கு வரவேற்பு அளிக்கின்றன.

- இவ்வளவுக்கும் மேல் சாலை விதிகளை மக்கள் அறியாதிருப்பதும் அறிந்தாலும் அனுசரிக்காமலிருப்பதும் விபத்துக்கள் நிகழ அதி முக்கிய காரணங்கள்—.

புகைப்படங்கள்: சுபா





ரேஷன் தியேட்டருக்கு அழைத்துப் போனார்கள்.

ஐந்து மணி நேரத்துக்குப் பின் வார்டுக்குத் திரும்பிய பாலசுப்பிரமணியம் அன்றிரவு பத்து மணிக்கு மரணமடைந்தார். அவருக்கு உடனே வைத்திய உதவி கிடைத்திருந்தால், உறவினருக்கு உடனே தகவல்விட்டிருந்தால் ஒருவேளை ஒரு நல்ல இன்ஜினியரைத் தமிழகம் இழக்காமல் இருந்திருக்கும். சாலை சீராக இருந்திருந்தாலோ விபத்தே நேர்ந்திருக்காது.

அவர் மரணம் அளித்த வேதனையுடன் ஜி. எச். அளித்த வேதனைகளும் சேர்ந்து கொண்டதுதான் கொடுமையிலும் கொடுமை. சவக்கிடங்குக்கு உடல் சென்று விட்டது. காலையில் பகீரதப் பிரயத்தனம்செய்து பல விதமான அத்தாட்சிகளையும் சான்றிதழ்களையும்சமர்ப்பித்து உடலைப் பெற்றுக் கொள்ளலாம் என்று பார்த்தால் நிர்வாணமாக இருக்கிறது! ''பக்கத்தில் துணி கிடைக்கும். வாங்கி வாருங்கள்!'' என்று யோசனை கூறப்பட்டது! முதல்நாள் மாலை அவர் அணிந்திருந்த வேட்டி சட்டை, போர்வை முதலானவை எங்கே, எப்படி மாயமாய் மறைந்தனவோ! பணம் கரைவது கிடக்கட்டும். மனம் என்ன பாடுபடுகிறது? அதை யார் சிந்திக்கிறார்கள்?

ஒரு விபத்து ஆபத்து என்றால் தனியார் மருத்துவ மனையில் ஏன் சிகிச்சை அளிக்க மறுக்கிறார்கள். ''போலீஸ் விசாரணை, கோர்ட் கேஸ், வாய்தா ஆகியன அளிக்கும் தொல்லைகளைத் தவிர்க்கத்தான். ஒரு ஸ்டேட்மெண்ட் எழுதிக் கையெழுத்திட்டுத் தந்தால் போலீஸுக்குப் போதாது. சாட்சியாகக் கோர்ட்டில் ஆஜராக வேண்டும். ஒருநாள் முழுதும் வீணாகும். அன்றைக்குப் பார்த்து ஒரு அவசர கேஸ் ஆபரேஷனுக்குக் காத்திருக்கும்..... டாக்டர்களுக்கு அதிகத் தொல்லை இல்லாமல் விதிமுறைகளை மாற்றி அமைத்தால் ஆபத்துக்கு உதவ மாட்டேன் என்று யாரும் கூற மாட்டார்கள்'' என்கிறார் ஒரு பிரபல டாக்டர்.

அபாயகரமான நிலையில் அவசர சிகிச்சைக்கு இரவு ஒரு மணிக்குக் கொண்டு வந்து சேர்க்கப்படுகிற ஒருவருக்கு மறுநாள் காலை ஒன்பதரை மணி வரை சிகிச்சை ஏதும் தரப்படவில்லை என்றால் இந்த ஜி. எச். இருந்தாலென்ன, இடிந்தாலென்ன? இதற்கு இடையூறாக இருப்பவை என்னென்ன என்று பார்த்து நிவர்த்திப்பது அப்படி என்ன பகீரதப் பிரயத்தனமான காரியமா? முயற்சி இன்மைதான் முக்கிய காரணம்.

பாலசுப்பிரமணியத்துக்கு நேர்ந்த கதி ஏதோ அபூர்வமாக நிகழ்கின்ற சம்பவம் அல்ல. விபத்துக்கு உள்ளாகும் மிகப் பெரும்பாலோருக்கு ஏற்படும் அனுபவம்தான். நாளை உங்களுக்கும் நேரலாம், எனக்கும் ஏற்படலாம்! ஆனால் நிலைமை சீர்திருந்தப் போகிறதா? எப்போது?

-சலன்

# பொங்கல் கவியரங்கம்



### ஒப்பாரி — **மன்மத ராஜாக்கள்**

ஒட்டம் பிடிக்கிற மக்கமாரே ஒரு நிமிஷம் நில்லுங்களேன்
ஓயாமப் பொலம்பறேனே என்னன்னு கேளுங்களேன்ய்யா...
மம்முத ராசாங்கோன்னு மதிகெட்டுப்போய் நின்னேனே
மாஞ்சி மாஞ்சி சிரிக்கலான்னு தப்புக்கணக்கு போட்டேனேய்யா...
எந்தக் கதையை சொல்லுவேன் எப்படி நான் சொல்லுவேன்
எப்படித் தான் சொன்னாலும் நீ எடுபடாம போய்டுவியே — ராசா
கல்லாப்பெட்டி சிங்காரம் கரையாத அலங்காரம் — ஒன்னைக்கண்டா
கரும்பா இனிக்குமின்னு கனவோட வந்தேனே.
கண்ட காட்சியெல்லாமே கனவாப் போய்டிச்சேய்யா.
ஊலு மோகனும், கராத்தே மணியாம், சந்திரனும், சுரேஷாம்
லோ கட்டு அனுராதாவாம், நளினியாம் — இத்தனேபேர் கூட்டம்
இருந்துங் கூட முடியலையே, எழுந்து நிக்க வழியில்லையேய்யா...
எம் மம்முத ராசாவே—

சங்கரு—கணேசு சங்கூதக் கேட்டுப் போனியா
சாரமிலா ராம நாராயணன் பேச்சுக் கேட்டுப் போனியாய்யா...
சுரேசுக்கும் நளினிக்கும் லவ்வு—சொல்லப் போறேன் கேட்டுக்கோன்னியே
சுத்திச் சுத்தி ஓடிப்போய் சுத்திக்கிட்டே நின்னியே
பாதி வரைக்கும் பழைய மாவை அரைச்சப்புறம்
பரலோகம் போனவரை பதவிசா சுத்த ஆரம்பிச்சியே.
இத்தனையும் இழுத்துப்போட்டு இங்கிதமா பேசாததாலே
இனிமே தாங்காதுன்னு இல்லாமப் போயிட்டியாய்யா...
ஒட்டம் பிடிக்கிற மக்கமாரே ஒரு நிமிஷம் நில்லுங்களேன்
ஓயாமப் பொலம்பறேனே......



### தூதுப்பாடல் — **நான் மகான் அல்ல**

சோதனைகள் வந்து உடல் சோர்ந்திருந்த நேரத்தில்
போதனைகள் இல்லாத படமொன்றைப் பார்ப்போமென
சாதனைகள் செய்த ஒரு சிரஞ்சீவி டைரக்டரின்
ஜாதகத்தை நம்பி இந்த ஜாலத்தமிழ்ப் படம் கண்டேன்
நீரலையில் மிதக்கின்ற நிலவே நீ கேட்டுச் சென்று சொல்லிவிடு.

பைநிறைய பணமிருந்தால் நீதியையே விலைபேச
வையகத்தில் ஆளிருக்க, வேதனையில் வழிதேடி
கைநிறைய கொடுக்கவொணு ஏழைகளின் தரப்பாக
தலைநிறைய புத்தியுடன் வாதமிடும் ஒரு வக்கீல்.
மலர் தனில் ரீங்கரிக்கும் மணிவண்டே நீகேட்டுச் சென்று உரைத்திடு.

பணத்திற்கும் குணத்திற்கும் பரபரப்பு மோதல்கள்
படிப்படியாய்ச் சண்டைகள் பஞ்சமில்லாப் பாடல்கள்
பார்க்கத்தான் பொறுமையில்லை, பதுங்கத்தான் வழியுமில்லை.
கருமலையை வகிடெடுத்த அருவியே நீகேட்டுப்போய்ச் சொல்லிவிடு.

சீற்றமுடன் ரஜினிகாந்த் சிலுப்புகின்ற ராதாவுடன்
மாற்றுடையில் வில்லனிடம் நாட்டியங்கள் ஆடுகிறர்.
காற்றசையும் வேகத்தில் கால்களினல் எதிரிகளின்
தோற்றத்தையே சீரழிக்கும் சண்டைகளைப் போடுகிறர்.
'ரெட்டிகாரு' சோவின் ரெட்டை அர்த்த வசனங்கள்
தட்டிக் கொண்டு செல்கின்றன 'பாக உன்னரு' பாராட்டை
'என்னங்க சுகுதை' வி. கே. ஆர்., எதிர்பாராமல் நம்பியார்
ஏமாற்றுத நடிப்புடன் ஏற்றமுறத் திகழ்ந்தாலும் —
கால்கடுக்கக் கியூவில் நிற்கும் பொறுமைமிகு நண்பர்களே
முன்பாதிப் படக்கதையில் முந்திரியின் வாசமுண்டு.
பின்பாதி படம் நெடுக பழைய சோற்றுப் பருக்கைகளே.

—ஜெயமன்மதன்



# "நீங்களே சொல்லுங்கள் இது நியாயமா?"

சமீபத்தில் வில்லன் நடிகர் கண்ணனைச் சந்தித்த போது சற்றுச் சூடாகவே காணப்பட்டார்.

''1956-ல் நடிக்க ஆரம்பிச்சேன் சார். இதுவரை அறுநூறு படங்களில் நடித்திருப்பேன். படங்களின் எண்ணிக்கை தான் அதிகம். பல படங்களுக்கு பைசா கூட வாங்காமல் நடித்த — அதாவது தயாரிப்பாளரால் கடைசி வரை ஏமாற்றப்பட்ட அனுபவமும் உண்டு — சில சமயங்களில் ஏன்டா இந்த சினிமா லைனுக்கு வந்தோம் என்றுகூட நினைப்பதுண்டு.'' என்றார்.

''ஒரு தயாரிப்பாளர்.

அவர் தயாரித்த ஒரு படத்தில் ஏற்கெனவே நடித்திருக்கிறேன். கடைசிவரை காலணா தராமல் ஏமாற்றிய புள்ளி. சமீபத்தில் அவர் சம்பந்தப்பட்ட யூனிட் ஒரு புதுப்படத்தைத் துவக்கியது. அதில் நடிக்கக் கால்ஷீட் கேட்டார் டைரக்டர். ஏற்கெனவே அந்தத் தயாரிப்பாளரின் படத்தில் நடித்து ஊதியம் பெறாத விஷயத்தை நாசூக்காகச் சொன்னேன். டைரக்டர் உடனே புதுப்படத்துக்கு ஐநூறு ரூபாய் அட்வான்ஸ் மட்டும் வாங்கித் தந்தார். தொகையைப் பார்த்ததுமே 'சுருக்' கென்றிருந்தது. என்னை நானே சமாளித்துக் கொண்டேன்.

மவுண்ட் ரோடில் ஒரு ஆம்னி பஸ்ஸை ஓடவிட்டு அதற்குள் நானும் ஹீரோ ஜெய்சேகரும் சண்டையிடும் காட்சியை எடுத்தார்கள். ஜெய் சேகர் உலோக அமைப்புடைய லெதர் ஷூ போட்டிருந்தார்.

கலைஞர் கருணாநிதி சிலை அருகே ஆம்னி பஸ் வேகமாகச் சென்றது. உள்ளே ஜெய்சேகர் என்னைத் தாக்க நான் டிரைவர் சீட்டின் அருகே போய் விழுந்தேன். ஹீரோவின் ஷூ என் கண்ணில் பட்டுவிட்டது. சில நிமிடங்கள் எனக்கே மயக்கம் வந்து விட்டது.

அவசரம் அவசரமாக பஸ்ஸை நிறுத்தினார்கள். அதற்குள் கூட்டம் கூடிவிட்டது. அதுசமயம் கோட்டைக்குச் சென்று கொண்டிருந்த முதலமைச்சர் எம். ஜி. ஆர். அவர்கள்காரி லிருந்தபடியே ''அது என்ன கூட்டம்? விசாரித்து வாருங்கள்'' என்று ஒரு போலீஸ் அதிகாரியிடம் கூறியிருக்கிறார்.

எழும்பூர் கண் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டேன். கண் தப்பியது தம்பிரான் புண்ணியம். ஹீரோ தப்பித் தவறி என் கண் பாப்பாவில் காலால் அடித்திருந்தால் இந்நேரம் குருடனாகி யிருப்பேன். விழுந்த அடி சற்றுத் தள்ளி விழுந்ததால் பிழைத்தேன்.

கண்ணுக்குக் கட்டுப் போட்டு மூன்று நாள் வெளிச்சத்தையே பார்க்கக் கூடாது என்று டாக்டர்கள் கூறிவிட்டனர்.

இதற்குள் போலீஸ் அதிகாரிகள் மூலம் முதல்வருக்கு விவரம் தெரிந்து



ஆஸ்பத்திரி டாக்டர்களிடம் என்னைப்பற்றி அக்கறையுடன் விசாரித்திருக்கிறார்.

மூன்று நாள் கழித்து வீட்டுக்கு வந்தேன். ஹீரோ மட்டும் போன் செய்து தற்செயலாக நடந்த தவறுக்கு மன்னிப்புக் கோரினார். அதே சமயம் தயாரிப்பாளரும் ஆகட்டும், டைரக்டர் ஆகட்டும் இதுவரைஎனக்கு என்ன ஆச்சு என்று டெலிபோனில் கூடக் கேட்கவில்லை.

சமீபத்தில் தான் இன்னொரு அதிர்ச்சி தரும் செய்தியையும் கேள்விப்பட்டேன்.

எனக்குப் பதிலாக படத்தில் வேறொரு நடிகரை 'புக்' பண்ணிப் படமெடுப்பதாக.

நீங்களே சொல்லுங்கள்— இது நியாயமா?''

குமுறிக்கொண்டே சொன்னார் கண்ணன். தமிழ்ப்பட உலகின் கௌரவத்தைக் காப்பாற்றிவரும் சில புள்ளிகளைப் பற்றிக் குறிப்பிடவும் அவர் தவறவில்லை.

பேட்டி:

மன்னை சௌரிராஜன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# ஹா...ச்சு ஹா...ச்சு
# நாளே பாழாப் போ...ச்சே

**ஜலதோஷம் உங்கள் நாளையே பாழாக்க விடாதீர்கள்.** மூக்கு ஒழுகல், அடைப்பு, தலை பாரம். இவை ஜலதோஷத்திற்கே உரித்தான அறிகுறிகளாகும். இதனால் உங்களுக்கும் தொல்லை, உங்கள் நாளுக்கும் தொல்லை. சிந்தித்துச் செயல்பட வேண்டாமா? கோல்டரின் சாப்பிட்டுப் பாருங்களேன்! அது விசேட ஃபார்முலாவின்படி தயாரான ஜலதோஷ மாத்திரையாகும். வசதிக்கு வசதி, நிவாரணத்திற்கு நிவாரணம்!




ஜலதோஷம் வாட்டுகிறதா?
கோல்டரின் அதை விரட்டுகிறது.

REGISTERED No. M. 43??
Registered as a Newspaper in Sri Lanka